# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 18 Issue 6 January 2024 Rs.25
ஆண்டு 18 இதழ் 6 ஜனவரி 2024 ரூ.25



ப.தெய்வீகன்
நேர்காணல்

நோபல்
உரைகள்
புதிய தொடர்

# அல்பகர்க் முதல் ஆன்ட்ரியா வரை

## ஆங்கிலோ இந்தியச் சமூகம்

ஆண்டு 18 இதழ் 6

அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜனவரி-2024 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
திலகவதி

ஆசிரியர்
பிரபு திலக்

ஆலோசனைக் குழு
ஓவியம்: சந்ரு
மனநலம்: டாக்டர் மா. திருநாவுக்கரசு
வரலாறு: பொ. வேல்சாமி
மொழிபெயர்ப்பு: நாகரத்தினம் கிருஷ்ணா
திரைப்படம்: விட்டல்ராவ்
கல்வி: பேரா. தியாகராஜன்
அறிவியல்: பத்ரி சேஷாத்ரி
இலக்கியம்: தேவேந்திரபூபதி
நாடகம்: அ. ராமசாமி
ஊடகம்: இளைய அப்துல்லாஹ்
சூழலியல்: மோகன்ராம்
இசை: ரவிசுப்பிரமணியன்
விளையாட்டு: ஆர். அபிலாஷ்
தற்கால நிகழ்வுகள்: செ. சண்முகசுந்தரம்
அரசியல்: மருதன்

வடிவமைப்பு: பிரபாகரன்

அம்ருதா
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒமிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# இந்த இதழில்...

# மீண்டும் வெள்ளம்!

## நாம் கற்றுக்கொள்ள மறுக்கும் பாடம்!

### பிரபு திலக்

தூத்துக்குடி மாவட்டம், காயல்பட்டினத்தில் 'வரலாற்றில் இல்லாத வெள்ளம்' வானத்தில் இருந்து கொட்டியுள்ளது. இருபத்தி நான்கு மணி நேரத்தில் 95 செமீ மழை. இத்தனைக்கும் காயல்பட்டினம் மலைப் பிரதேசம் இல்லை, புயலும் உருவாகவில்லை. ஒரு சமவெளி பிரதேசத்தில் இப்படி ஒரு பெருமழையை வரலாறு பார்த்திருக்குமா? சந்தேகம்தான். சென்னை போன்ற ஒரு மாநகரம் இப்படிப்பட்ட திடீர் பெருமழையை சந்தித்தால் தாங்குமா? இயற்கை நம்மை எச்சரித்துக்கொண்டே இருக்கிறது, நாம் தான் கற்றுக்கொள்ள மறுக்கிறோம்.

ஆம், தமிழகத்துக்கு இது புதியதல்ல. சென்றமாதம் திருநெல்வேலி, தூத்துக்குடி, தென்காசி மாவட்டங்கள் மட்டுமல்ல சென்னையும் பெருமழையால் பாதிக்கப்பட்டது. 2015 டிசம்பரில் சென்னை இப்போதை விட கடுமையாக பாதிக்கப்பட்டது. பல இடங்களில் இரண்டடுக்கு வீடுகளில் இரண்டாவது அடுக்கில் இருந்தவர்களும் மூழ்க வேண்டிய அளவு தண்ணீர் உயர்ந்தது. அப்போது மட்டுமல்ல அதற்கு முன்னரும் பின்னரும் கடலூர் அடிக்கடி மோசமான பாதிப்பை சந்தித்துள்ளது. தாமிரபரணி ஆற்றங்கரையோர ஊர்கள் இப்போதுபோல் 1992இலும் பேராபத்தை சந்தித்தன.

எப்போதாவது என்பது போய் கடந்த சில ஆண்டுகளாக அடிக்கடி நிகழும் இந்த திடீர் வெள்ளப் பெருக்குகளுக்கு காரணம் 'தீவிர காலநிலை நிகழ்வுகள்' என்கிறார்கள், சூழலியலாளர்கள். "இது வரும் காலங்களில் இன்னும் அதிகமாகும்; 3 மணி நேரத்தில் அதிகமான மழைப்பொழிவு நிகழ்ந்து, திடீர் வெள்ளம் ஏற்படும்" என்கிறார்கள். உதாரணமாக, தமிழ்நாட்டின் மழை நாட்கள் அதிகபட்சம் 60 நாட்கள்தான்; மழையின் அளவு 1200 மி.மீட்டர். ஆனால், பருவநிலை மாற்றத்தால் இனி ஐந்து நாட்களிலேயே இந்த 1200 மி.மீ. மழையும் பொழியும் என்கிறார்கள்.

2015ஆம் ஆண்டு டிசம்பர் 1, 4ஆம் தேதிகளில் சென்னையில் 800 மி.மீ. மழை பெய்தது. அதாவது சென்னையில் ஒரு வருடம் பெய்ய வேண்டிய மழை இரண்டே நாட்களில் கொட்டி தீர்த்துவிட்டது. இப்போது காயல்பட்டினத்திலும் நிகழ்ந்தது இதுதான்.



வன அழிப்பும் இந்த திடீர் வெள்ளப் பெருக்குகளுக்கு காரணம். மழை பெய்தால் அதனை உள்வாங்கி தக்கவைக்கும் தன்மையை, வன அழிப்புகள் காரணமாக மலைகள் இப்போது இழந்துவிட்டன. மேற்குத் தொடர்ச்சி மலைக் காடுகள் முன்பு ஸ்பாஞ்ச் போல் செயல்பட்டு எவ்வளவு மழை பெய்தாலும் உறிஞ்சிக்கொண்டது. பின்னர் நீரூற்றுகளாக மலையடிவாரத்துக்கு தண்ணீரை வழங்கிக்கொண்டே இருந்தது. மலையில் இருந்த மரங்களை அழித்து, அதன் ஸ்பாஞ் தன்மையை சிதைத்துவிட்டதால், இப்போது மழைத் தண்ணீர் அப்படியே கீழிறங்கி வெள்ளப் பெருக்கை ஏற்படுத்துகிறது.

தாமிரபரணி வெள்ளத்துக்கு வன அழிப்பு காரணம் என்றால் சென்னை வெள்ளம் நீர் நிலைகளை, நீர் வழித்தடங்களை ஆக்கிரமித்து எழுப்பப்பட்ட முறையற்ற கட்டுமானங்களால், வெள்ளநீர் வடிய வழியில்லாமல் உருவான அழிவு.

இப்படிப்பட்ட திடீர் கனமழையும் அதனால் உருவாகும் திடீர் வெள்ளப் பெருக்குகளும் இனி அதிகமாகும் என்பதால், அதை தாங்கக்கூடிய வகையில் நம்முடைய நகர வடிவமைப்புகள் இருக்க வேண்டுமென்று இந்திய தொழில்நுட்ப நிறுவன ஆய்வறிக்கை வலியுறுத்துவது குறிப்பிடத்தக்கது.

தற்போது நம் ஊர்களில் உள்ள வடிகால்கள் தினம் பெய்யக்கூடிய மழையின் அளவைக்கொண்டே வடிவமைக்கப்பட்டுள்ளன. ஆனால், மாதாந்திர அல்லது தினசரி சராசரி அளவுகள் எல்லாம் பழங்கதை என்றாகிவிட்ட நிலையில், மூன்று மணி நேரத்தில் தீவிர மழைப்பொழிவுதான் இன்றைய யதார்த்தமாகிவிட்ட நிலையில், நாம் சுதாரித்துக்கொள்வதும் நம் நகர வடிவமைப்புகளை திடீர் வெள்ளப்பெருக்கை தாங்கும்படி சரிசெய்வதும் உடனடி அவசியம்.

முக்கியமாக நீர்நிலை ஆக்கிரமிப்புகள் போர்க்கால அடிப்படையில் அகற்றப்பட வேண்டும். அரசுக்கு மட்டுமல்லாமல் மக்களுக்கும் விழிப்புணர்வு வேண்டும். எல்லா வடிகால்களிலும் குப்பையை கொட்டி மூடிவிட்டோம். இதனால் மழை நீர் வடிய வழி இல்லாத சூழல்தான் சென்னை உள்பட எல்லா நகரங்களிலும் உள்ளது.

எதிர்காலத்தில் நாம் சந்திக்கப்போகும் இன்னொரு முக்கிய பிரச்சினை தண்ணீர். வருடம் முழுவதும் பெய்ய வேண்டிய மழை நான்கு நாட்களில் கொட்டும்போது, அவற்றை சேமிக்காமல் விட்டால், அதன்பின்னர் கடும் வறட்சிதான் நிலவும். எனவே, இனி மழை பெய்யும்போது அதனை தேக்கி வைத்தால் மட்டுமே தண்ணீருக்கு வழி கிடைக்கும். எனவே, இருக்கும் நீர்நிலைகளைத் தூர்வாரி, புதிய நீர்நிலைகளை உருவாக்கி, மழை பெய்யும்போது தண்ணீரை வீணாகாமல் நீர்நிலைகளில் தேக்கி வைத்து, வறட்சி காலங்களில் பயன்படுத்த பழக வேண்டும்.

தருமமிகு சென்னை-6

## ஆங்கிலோ இந்தியச் சமூகம்

# அல்பகர்க் முதல் ஆன்ட்ரியா வரை

**சந்தியா நடராஜன்**



சமந்தா, 'புஷ்பா' பாடல் காட்சியில்

500 ஆண்டுகளுக்கு முன்புதான் இந்தியாவில் 'ஆங்கிலோ இந்தியன்' என்ற கலப்பினம் உருவானது. 'வாஸ்கோடகாமா'வின் வருகை உருவாக்கிய தாக்கத்தில் மேலைக் கடலோரம் வந்திறங்கிய போர்ச்சுகீசியர்கள் இந்தியப் பெண்களை மணமுடித்துக்கொள்ளத் தொடங்கியதால் ஏற்பட்ட இனம்தான் இந்த ஆங்கிலோ இந்தியன் இனம். ஆரம்பத்தில் இந்த இனத்தினரை, 'யுரேஸியன்' என்றே அழைத்தார்கள்.

கி.பி.1498இல் வாஸ்கோடகாமா கோழிக்கோட்டில் வந்திறங்கினார். அப்போது அங்கு ஆட்சியதிகாரத்திலிருந்த ஜமோரின்களுடன் நல்லுறவு பேணி, வாசனைத் திரவியங்களுடனும் அரிய நவரத்தினக் கற்களுடனும் நாடு திரும்பி, அவர் இந்தியாவுக்கும் போர்த்துகீசிய நாட்டிற்கும் இடையே கடல்வழி வாணிகத்தைத் தொடங்கிவைத்தார். பத்தே ஆண்டுகளில் 'டையூ' மாகாணத்தின் கவர்னர் ஆனார், அல்யோன்சா டி அல்பகர்க் என்ற போர்த்துகீசியர்.



வணிகத்துக்காக இந்தியாவில் குடியேறிய போர்த்துகீசியர்கள் இந்தியப் பெண்களைத் திருமணம் செய்வதை ஆதரித்து, அல்பகர்க் தானே முன்னின்று அத்தகைய திருமணங்களைச் சீரும் சிறப்புமாக நடத்திவைத்தார். இத்தகைய திருமண உறவுகள் தங்களுடைய வணிக நலனுக்குத் துணைபுரியும் என்று அவர் நம்பினார். ஆனால், காலப் போக்கில் அந்நியரை மணம் முடித்த இந்தியப் பெண்களை அவர்களது குடும்பங்களும் உறவினர்களும் ஏற்கவில்லை. இந்தக் கலப்பினக் குடும்பங்கள் இழிபுகழ் தேடிக்கொண்டன. அல்பகர்க் நினைத்தது ஒன்று. நடந்தது வேறு ஒன்று.

போச்சுகீசியர்களுக்குப் பிறகு டச்சுக்காரர்களும் ஆங்கிலேயர்களும்

இந்தியாவுக்கு வரத் தொடங்கினார்கள். வணிகம் செய்ய வந்தவர்களுடன் கிறித்தவ மதம் பரப்ப பாதிரிமார்களும் போதகர்களும் உடன் வந்தார்கள். ஆரம்பத்தில் ஆடவர்களை மட்டுமே இந்த வணிகக் கப்பல்கள் சுமந்து வந்தன. பெண் துணை இன்றிக் குடியேறியவர்களுக்கு இந்தியப் பெண்கள் வாழ்க்கைத் துணை ஆனார்கள். இந்த இந்தியப் பெண்கள் ஞானஸ்நானம் செய்துவைக்கப்பட்டு கிறித்துவர்களானார்கள். இவர்களுக்குப் பிறந்த குழந்தைகள் தந்தை மொழியான ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்டனர். மதம் மாறிய தாயின் அடியொற்றிக் கிறித்துவர்களானார்கள். உணவும் உடையும் ஐரோப்பியமயமானது. இந்தியர்களிடையே அந்நியப்பட்ட ஒரு சமூகம் வளர்ந்தது. இதுவே ஆங்கிலோ இந்திய வம்சத்தின் பூர்வ வரலாறு.

எனக்கு ஆங்கிலோ இந்திய இனத்தின் மீதி பற்றும் பரிவும் இருந்து வருகிறது. நான் பிறந்தபோது என்னைத் தொட்டுத் தூக்கிய பெண் மருத்துவர் ரோட்டரிக்ஸ் என்ற ஆங்கிலோ இந்தியர். அவர்தான் எனக்குப் பெயரிட்டவரும்கூட. எனது ஆங்கிலோ இந்தியப் பற்றுக்கும் பரிவுக்கும் ஆங்கிலோ இந்தியக் கரங்களின் ஆதி நாள் மெய்த்தீண்டல் ஒரு காரணமாக இருக்கலாம். எங்களூரில் இருந்த ஒரே ஆங்கிலோ இந்தியக் குடும்பம் டாக்டர் ரோட்டரிக்ஸின் குடும்பம் மட்டுமே.

*1985*இல் நான் சென்னை சுங்கஇல்லத்தில் சேர்ந்தபோது ஆங்கிலோ இந்தியர்கள் பலர் மூத்த அதிகாரிகளாக இருந்தனர். அவர்களது வாழ்க்கை முறை எவரையும் வசீகரிக்கும். 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்பதே தலைமுறை தலைமுறையாக ஆங்கிலோ இந்திய சமூகம் ஏற்றுக்கொண்டு கடைப்பிடித்து வரும் வாழ்வியல். மது, விருந்து, இசை, நடனம், கேளிக்கை போன்ற நிகழ்வுகள் எல்லாம் ஏதாவது ஒரு காரணம் கொண்டு அடிக்கடி அவர்களது வீடுகளில் நிகழ்ந்த வண்ணம் இருக்கும். பணம் சம்பாதிப்பதும் சொத்து சேர்ப்பதும் ஆங்கிலோ இந்தியச் சமூகத்தில் பிரதான விஷயம் இல்லை. அங்கே கொண்டாட்டங்களுக்கு மட்டுமே முன்னுரிமை. காசை இறுக்கி முடியாதவை அவர்களது விரல்கள். பூரிப்புக்குப் பிறகுதான் சேமிப்பு. சிக்கனம் என்பது அவர்களுக்குச் சரிப்பட்டு வராது. நடனத்தில் நாட்டம் உள்ளவர்கள். எந்த ஒரு நிகழ்விலும் ஆங்கிலோ இந்திய இணையர்கள் நடனமாடாமல் இருப்பதில்லை. திருமண நிகழ்வுகளில் எல்லோரும் நடனம் ஆடுவார்கள். கிராஸ் ஸ்டெப் டான்ஸ் இந்தச் சமூகத்தின் தனித்துவமிக்க நடனமாகும். சாம்போ டான்ஸ், டோங்கோ டான்ஸ், பாக்ஸ் ஸ்டெப் முதலியவையும் இவர்கள் பயின்று பழக்கப்படுத்திக்கொள்ளும் நடன வகைமைகள்.

ரெக்ஸ் ரோட்ரிக்ஸ், ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ், மிட்செல், பிரௌன், பென்ட், பேரோரா ஆகியோர் நான் சுங்கத் துறையில் பணியில் சேர்ந்தபோது பணியாற்றிக்கொண்டிருந்த ஆங்கிலோ இந்திய அதிகாரிகள். பெரும்பாலான ஆங்கிலோ இந்தியர்களுக்குத் துறைமுகப் பிரிவில் பணியாற்றுவது பிடிக்கும். தினம் தினம், புதிய புதிய சரக்குக் கப்பல்கள் வரும். கப்பல் கேப்டன்கள் வெவ்வேறு நாட்டைச் சேர்ந்தவர்களாக இருப்பார்கள். மாதக் கணக்கில் மனிதர்களைப் பார்க்காதவர்கள் அவர்கள். விண்ணும் கடல் நீரும் மட்டுமே அவர்கள் காணும் காட்சிகள். கப்பல் கரையைத் தொட்டவுடன் மாலுமிகளும் கப்பல் பணியாளர்களும் சொர்க்கத்தின் வாசலைத் தொட்டுவிட்டதாகவே உணர்வார்கள். கப்பல் பணியாளர்கள் எவரும் சுங்க அதிகாரியின் அனுமதிக்குப் பிறகுதான் கப்பலிலிருந்து வெளியேறி நகரில் நடமாட முடியும். துறைமுகத்தில் கப்பல் கட்டப்பட்டவுடன் கப்பல் கேப்டனைச் சந்திக்கிற முதல் மனிதன் ஒரு சுங்க அதிகாரியைத் தவிர யாராக இருக்கமுடியும். அவர்களுடைய சந்திப்பு ஆனந்தத்தின் எல்லையைத் தொட்டுவிடத் துடிக்கும். திரவ பானங்கள் பொங்கி வழியும். குறிப்பாகக் கிரேக்க மாலுமிகளின் விருந்தோம்பல் எல்லாத் துறைமுகங்களிலும் பிரசித்தி பெற்றிருந்தது. சீருடை அணிந்த, துறைமுகச் சுங்க அதிகாரிகளின் பணி என்பது இன்முகத்துடன் ஆற்றப்படுவது. சுங்க அதிகாரிகள் ஒரு நாட்டின் கலாசார தூதுவர்கள் அல்லவா? ஆகவே, இந்தத் துறைமுகப் பணியை அக்கால ஆங்கிலோ இந்தியர்கள் நாடிச் சென்றதில் வியப்பில்லை.

துறைமுகத்திற்கு வரும் வெளிநாட்டுக் கப்பல்களை இஞ்சின் ரூம் தொடங்கி கப்பல் பணியாளர்களின் அறைகளையெல்லாம் சோதனையிட சுங்கப் பிரிவிலிருந்து வரும் குழுவுக்கு பிளாக் கேங் (Black Gang) என்று பெயர். பிளாக் கேங் வருகையின் போது கப்பலில் பதற்றம் பற்றிக்கொள்ளும். சுங்க அதிகாரிகள் 'டங்கிரி' என்ற உடை அணிந்து கடுமையாக வேலை செய்வார்கள். வெள்ளைச் சீருடை அணிந்து மிடுக்காக வரும் சுங்க அதிகாரிகள் 'டங்கிரி' அணிந்து செயலாற்றுகையில் கப்பல் மெக்கானிக்குகள் போலவோ இயந்திரத் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் பணியாளர்கள் போலவோ தோன்றுவார்கள். இந்த உடையில் யாரும் அவர்களை அதிகாரிகள் என்று நினைக்க மாட்டார்கள். இப்படிப்பட்ட பணிகளில் இந்த ஆங்கிலோ இந்திய அதிகாரிகளை நான் பார்த்ததே இல்லை.

விதிவிலக்காகப் புலனாய்வுப் பிரிவில் ஈடுபாடு கொண்டவராக ஒருவர் இருந்தார். அவர்தான் ரெக்ஸ் ரோட்ரிக்ஸ். நிறத்திலும் அவர் ஆங்கிலோ இந்தியரின் பொன்னிற மேனியிலிருந்து மாறுபட்டவர்; கரிய திருமேனியர். அவர் பேசும் தமிழ் மட்டும் அவரை அடையாளம் காட்டும். சென்னை விமான நிலையத்தில் சுங்க அதிகாரியாக வேலை பார்த்துவந்தார். வெளிநாட்டிலிருந்து வரும் பயணிகளின் உடைமைகளைச் சோதனையிட்டுச்



ஆண்ட்ரியா

சுங்கத் தீர்வை வசூலிப்பது மட்டுமே அவரது கடமை. வெள்ளைச் சீருடையில் இருக்க வேண்டும். அவர் இண்டெலிஜன்ஸ் அதிகாரிகளின் பணியில் ஆர்வம் காட்டுவார். பணிக்கு வரும்போது இரண்டு சூட்கேஸ்கள் கொண்டு வருவார். ஒன்றில் அவரது சீருடை இருக்கும். மற்றொன்றில் விதவிதமான ஸ்பேனர்கள், ரம்பம், பல்வகை ஸ்க்ரூ ட்ரைவர்கள், கொறடு, சுத்தியல் உள்ளிட்ட மெக்கானிக் ஷெட் கருவிகள் எல்லாம் இருக்கும். ஒரு பயணி கொண்டு வரும் வாஷிங் மெசின், ஏர் கண்டிஷனர் போன்ற பொருட்களைச் சந்தேகத்தின் பேரில் இன்டெலிஜென்ஸ் பிரிவு அதிகாரிகள் அக்கு வேறு, ஆணி வேறாகப் பிரித்துச் சோதனையிடும்போது ரெக்ஸின்இரண்டாவது சூட்கேஸ் துணை நிற்கும். எண்பதுகளின் இறுதியில்தான் சென்னை விமான நிலையத்தில் பயண உடைமைகளைச் சோதனை செய்யும் ஸ்கேனர் பயன்பாட்டுக்கு வந்தது. ரெக்ஸ் தமிழ்தான் அக்கால ஆங்கிலோ இந்தியர்கள் பேசும் தமிழுக்கு வகைமாதிரி. 'கலெக்டர் வர்றான்னு பியூன் சொல்றாரு' என்பார். பொதுவாக ஆங்கிலோ இந்திய அதிகாரிகளை, வயதில் குறைந்தவர்கள் என்றாலும் துரை என்று அழைப்பது வழக்கம்.

டிகுரூஸ், மெனேஸஸ் என்று இரண்டு சுங்க அதிகாரிகள்இருந்தனர். இருவருமே ஆங்கிலத்தில்தான் பேசுவார்கள். தட்டுத்தடுமாறும் அவர்கள் பேசும் தமிழ். இருவரையும் அவர்கள் பெயர்களை வைத்து ஆங்கிலோ இந்தியர்கள் என்றே நினைத்திருந்தேன். பிறகுதான் தெரிந்தது, அவர்கள் இருவரும் கோவாவைச் சேர்ந்த கொங்கணி இனத்தவர் என்று. அவர்கள் ஆங்கிலோ இந்திய சமூகத்தினர்இல்லை.

போர்ச்சுகீசியர்களின் அதிகாரம் இந்தியாவின் மேற்குக் கடற்கரையில் வலிமை பெற்ற பிறகு கோவாவில் மதமாற்றமும் தீவிரமடைந்தது. அப்படி மதம் மாறியவர்களுக்கு ஞானஸ்நானத்தின்போது போர்ச்சுக்கீசிய கிறித்துவப்பெயர்கள் சூட்டப்பட்டன. இவர்கள் ஆங்கிலோ இந்தியர்கள் இல்லை. மதம் மாறிய கத்தோலிக்க கிறித்துவர்கள். போர்ச்சுகீசிய ஆணுக்கும் இந்தியப் பெண்ணுக்கும் பிறந்து வளர்ந்தவர்கள்தாம் ஆங்கிலோ இந்தியர்கள். கோவாவில் அவர்களும் போர்ச்சுகீசிய பெயர்கள் தாங்கி வாழ்ந்தனர்.

தமிழ்நாட்டிலும் ஐரோப்பியப் பெயர்களைக் கொண்ட ஒரு கிறித்துவ சமூகம் இருக்கிறது. இந்தச் சமூகத்திற்கு, 'ஃபெர்னாண்டோ கிறிஸ்டியன்' என்று பெயர். இந்தப் பிரிவைச் சார்ந்த கிறித்தவர்கள் தூத்துக்குடி, நாசரேத் போன்ற பகுதிகளைச் சார்ந்தவர்கள். இவர்களில் பெரும் பகுதியினர்

தூத்துக்குடிக் கடலோரம் வாழ்பவர்கள்.

திருமதி ஸ்பெர்ஜன் என்பவரைப் பார்க்கச் சென்றிருந்தேன். அவர் ஆங்கிலோ இந்தியராக இருக்கலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தேன். அவர் வந்தார். சேலை உடுத்திய தமிழ்ப் பெண்ணாக இருந்தார். பேச ஆரம்பித்தார். 'இன்னைக்கு ஈவ்னிங் ப்ரேயர் மீட்டிங் இருக்கு. ஐயர் வீட்டுக்கு வர்றாரு. அதனால உங்க ஃபங்சனுக்கு வரவியலாது. நீங்க எப்டி வந்தீங்க, இங்க தெரு முனையிலேயே பஸ் நிக்கி' என்றார். ஐயரா! கிறித்துவர் வீட்டு ப்ரேயரில் ஐயர் என்ன செய்யப்போகிறார்? போகப்போகத் தெரிந்தது, நெல்லை கிறித்துவர்கள் பாதிரியார் அல்லது பாஸ்டரை ஐயர் என்றே சொல்கிறார்கள். தமிழ்க் கிறித்துவ உலகில் தூத்துக்குடி ஃபெர்னாண்டோ கிறித்துவர்கள் ஒரு தீவு. அவர்களைப் பற்றி முத்துக்குமார் எழுதியுள்ள 'தூத்துக்குடி' மற்றும் 'திருச்செந்தூர் அலைவாய் நினைவாய்' நூல்களில் விரிவாகக் காண முடியும்.

இயேசுவின் வாய்மொழியை வாழ்வின் பாதையாகவும் ஒளியாகவும் கொண்ட கிறித்துவர்களின் முகத்தில் நிலவும் அமைதியையும் ஒளிவிடும் அன்பையும் கண்டுணரும் தருணங்கள் பெற்றவன் நான். அதிலும் ஒரு படி மேலாக ஆங்கிலோ இந்தியர்களின் வாழ்வும் நட்பும் என்னை நெகிழ வைத்திருக்கின்றன. அவர்கள், அவர்கள் உலகத்தில் வாழ்கிறார்கள். இந்தச் சமூகப் பெண்களை, 'சட்டைக்காரிகள்' என்கிறார்கள். படித்தவர்கள் 'half caste' (குறைச் சாதி) என்று இவர்களைப் பழிக்கிறார்கள். 'vices of both, virtues of none' என்று இந்தச் சமூகம் இழிபுகழுக்கு ஆளாகிறது. இரு இனங்களின் ஒழுங்கீனங்களாம்; எவரின் ஒழுக்கமும் ஏதுமில்லையாம். தாய் இந்தியப் பெண் என்றாலும் இந்தியர்கள் இவர்களை வெறுத்தார்கள்; ஏற்கவில்லை. தகப்பன் வெள்ளையன் என்றாலும் மேற்கு இவர்களை நிராகரித்தது.

1857இல் சிப்பாய்க் கலகத்தின்போது ஆங்கிலோ இந்தியச் சமூகத்தினர் ஆங்கிலேயர்களுக்குப் பக்கபலமாக நின்றனர். அதற்குப் பிறகே சுங்கம், ரயில்வே, தொலைபேசி போன்ற துறைகளில் இச்சமூகம் தலையெடுத்தது. பெண்கள் டீச்சர்கள் ஆனார்கள்; நிறுவனங்களில் செக்கரட்டரியாக வேலை பார்த்தார்கள்; சினிமாவிலும் நடிக்கத் தொடங்கினார்கள். இடர்கள் எதுவாயினும் இன்பம் ஒன்றே இயல்பு என வாழத் தொடங்கினர்.

இந்த எளிய மனிதர்கள் கொண்ட சமூகத்தின் வரலாறு தமிழில் எழுதப்படவேண்டும் என்ற ஆசையை என்னுடன் பணியாற்றிய ரிச்சர்ட் ஓ கானர்ஸ் என்ற ஆங்கிலோ இந்திய நண்பரிடம் சொன்னேன். அப்படி ஒரு வரலாற்றை எழுத அந்தச் சமூகத்தில் தமிழில் எழுதக்கூடியவர்கள் எவரும் இல்லை. ரிச்சர்ட் ஆங்கிலோ இந்திய சமூகவியல் ஆய்வாளராகப் பெரும்பணி ஆற்றிவருபவர். எஸ்.முத்தையாவின் சில ஆக்கங்களுக்கு உறுதுணையாக நின்றவர். 'Anglos in the wind' என்பது இந்தச் சமூகத்திற்கான ஓர் இதழ். இதன் ஆசிரியரான ஹாரி மெக்லேர் என்பவரை ரிச்சர்ட் எனக்கு அறிமுகப்படுத்தினார். அவர் நடத்தி வந்த பத்திரிகையின் பிந்தைய இதழ்களை எனக்கு அளித்தார். அந்த இதழ்களில் அதிகம் பங்களித்திருந்தவர்கள் இன்றைய தலைமுறையினர். ரிச்சர்டும் ஹாரியும் இணைந்து சென்னை ஆங்கிலோ இந்தியச் சமூகம் குறித்துப் பத்துக்கும் மேற்பட்ட ஆவணப்படங்களை இயக்கியிருக்கிறார்கள். அவை அனைத்தையும் யூ ட்யூபில் 'PEPPER WATCHES' என்ற ஒளியலை வரிசையில் காணலாம்.

ஆங்கிலோ இந்திய இன வரலாறு குறித்த ஆங்கில நூல்களைத் தேடிக்கொண்டிருந்தேன். ஹெர்பர்ட் ஸ்டார்க் என்பவர் எழுதிய 'HOSTAGES TO INDIA' என்ற நூலின் பிரதி கிடைத்தது. இந்த நூலை 1926ஆம் ஆண்டு 'கல்கத்தா ஃபைன் ஆர்ட் காட்டேஜ்' என்ற நிறுவனம் வெளியிட்டுள்ளது. நூலாசிரியர் ஹெர்பர்ட் ஸ்டார்ஜ் வங்காளத்தின் கல்வித்துறையில் பணியாற்றியுள்ளார். இவர் எழுதிய இன்னொரு நூல் 'CALL OF THE BLOOD'.

'HOSTAGES TO INDIA' நூலைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட முடிவு செய்தேன். என்னுடன் சுங்கத் துறையில் பணியாற்றிய அனுராதாவும் நிர்மல்ராஜும் இணைந்து இந்நூலை மொழிபெயர்த்துத் தந்தார்கள்; 'இந்தியாவின் பிணைக்கைதிகள்' என்ற பெயரில் சந்தியா பதிப்பகம் வெளியிட்டது. ஆங்கிலோ இந்தியச் சமூகம் குறித்த அரிய அழகிய நிழற்படங்களை ஹாரி மெக்லேர் தந்து உதவினார். என் கனவு நிறைவேறியது.

மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை 'பன்னாட்டு ஆங்கிலோ இந்தியர்களின் கூடுகை' (INTERNATIONAL ANGLO INDIAN REUNION) என்ற நிகழ்வு ஒன்று நடைபெற்று வருகிறது. சில ஆண்டுகளுக்கு முன்பு அத்தகைய நிகழ்வு ஒன்றின் ஒரு பகுதியாக சென்னை லயோலா கல்லூரியில் ஆங்கிலோ இந்திய எழுத்தாளர்களின் கருத்தரங்கம் ஒன்று நடைபெற்றது. ANGLO IN THE WIND அமைப்பின் செயலாளர் ஹாரியின் அழைப்பை ஏற்று அந்தக் கருத்தரங்கில் நானும் ஆங்கிலத்தில் உரையாற்றினேன். அன்றைய தினத்தின் வரவு கணக்கற்ற புதிய உள்ளங்கள். 'STRANGERS ARE MY LOVERS'.

2009இல் சென்னை அருங்காட்சியக வளாகத்தில் அமைந்துள்ள மியூசியம் தியேட்டரில் நாட்டுப்புற இசை (Country music) நிகழ்ச்சியை ஆங்கிலோ இந்தியச் சமூகம் ஏற்பாடு செய்திருந்தது. ரிச்சர்ட் ஓ கார்னர்ஸ் அழைப்பின் பேரில் நானும் எனது சக சுங்க அதிகாரியான ஸ்ரீதரும் கலந்துகொண்டோம். 'கன்ட்ரி மியூசிக்' என்ற இசை அடிநாள் தொட்டே ஆங்கிலோ இந்தியர்களின் ஆவியில் கலந்திருந்தது.




மியூசியம் தியேட்டரில் உள்ள இருக்கைகளின் எண்ணிக்கை சுமார் 550. தியேட்டருக்குள் சுமார் 700 பேர் திரண்டிருந்தனர். எல்லோரும் ஆங்கிலோ இந்தியர்கள் எங்கள் இருவரைத் தவிர. அந்த நிகழ்ச்சிக்கு 'Blazing Guitars' (பிளேசிங் கிடார்ஸ்) என்று பெயர் வைத்திருந்தார்கள். கன்ட்ரி மியூசிக் இசைப் பாடல்கள் இயற்கை, காதல், பிரிவு, ரயில்வே, தொழிலாளிகள் குறித்து எழுதப்பட்ட பாடல்களாக இருக்கும்; இல்லத்தரசிகளின் வாழ்க்கையைப் பாடும் பாடல்களும் உண்டு. இவை உழைக்கும் வர்க்கத்தின் குரல். 19ஆம் நூற்றாண்டு கண்ட இந்த இசை வடிவத்தை இங்கிலாந்தின் மேல்தட்டு வர்க்கம் பொதுவெளியில் அங்கீகரிக்கவில்லை. ஆனால், தனி நபர்கள் இந்த இசையை ரசிக்கவும் செய்தனர். தொடக்க காலத்தில் கிடார் மட்டுமே கன்ட்ரி மியூசிக் நிகழ்வுகளில் இடம்பெற்று வந்த ஒரே இசைக்கருவி. கொஞ்சம் கொஞ்சமாக இன்னும் சில பக்க வாத்தியங்கள் கன்ட்ரி மியூசிக் மேடைகளில் இடம்பிடித்துக் கொண்டன.

'பிளேசிங் கித்தார்' நிகழ்வுக்குச் சென்னையில் உள்ள அமெரிக்க தூதரகத்தின் துணைத் தூதரும் வந்திருந்தார். மேடையில் தோன்றிய பாடகர்கள் தலையில் கவ் பாய் (cow boy) தொப்பியும் இடுப்பில் பொம்மைத் துப்பாக்கியும் வைத்திருந்தனர். இசை நிகழ்ச்சிக்கு வந்திருந்த சிலரும் இதே வேடத்தில் திரிந்தனர். இடைவேளையின் போது பொம்மைத் துப்பாக்கியுடன் வந்திருந்த ஒருவர் அரங்கத்திற்கு வெளியே உள்ள டீக்கடைக்கு வந்திருந்தார். அவரை ஏதோ கொலைகாரராக அல்லது கேடியாகக் கற்பனை செய்துகொண்ட ஒரு வழிப்போக்கர் போலீசுக்குபோன் செய்துவிட்டார். சில நிமிடங்களில் காவல்துறை படையெடுத்து வந்தது. உண்மை தெரிவதற்குள் அந்த ஆங்கிலோ இந்தியர் ஒரு நவரச நாடகத்தை நடத்தி முடித்துவிட்டார்.

இந்த கன்ட்ரி மியூசிக் பாடல்களை இலங்கை வானொலிதான் ஒலிபரப்பி வந்தது. ஐம்பது ஆண்டுகளுக்கு முந்தைய ஆங்கிலோ இந்தியர்கள் ரேடியோ சிலோனைக் கேட்காத நாள் இருக்காது என்கிறார் ரிச்சர்ட்ஸின் மனைவி ஷீனா.

பொதுவாக ஆங்கிலோ இந்தியர்களின் காலை உணவில் பிரட், முட்டை, பழங்கள் இடம்பெற்றிருக்கும். சென்னையில் இருந்தாலும் பில்டர் காபி பழக்கம் கிடையாது. ஓட்ஸ் அல்லது பிளாக் காபி அருந்துவார்கள். பன்றிக் கறியோ, மாட்டுக் கறியோ பிரதான மதிய உணவு. POKE VINDALOOஎன்ற வைன் அல்லது வினிகரில் ஊறவைத்த பன்றிக்கறி அவர்களது விசேச உணவு. கிறிஸ்துமஸ், புத்தாண்டு போன்ற விழா நாட்களில் இஞ்சி, எலுமிச்சை, சிகப்பு மிளகாய், இலவங்கம், ஏலம் முதலியவற்றைக் கொண்டு வீட்டிலேயே 'ஜிஞ்சர் ஏல்' தயாரிப்பார்கள். இதை O.Tஎன்று அழைக்கிறார்கள். அதாவது Old Temperance. ரிச்சர்ட்ஸின் மனைவி ஷீனாவுக்கு ஓ.டீ கைவந்த கலை. இன்னும் பத்து நாட்களில் கிறிஸ்துமஸ் வரப்போகிறது. ஷீனாவின் ஓ.டீயும் என்னை நோக்கி ஓடிவரும்.

சென்னையில் ரயில்வே மற்றும் ஐசிஎஃப் (ICF)இல் வேலை பார்த்த ஆங்கிலோ இந்தியர்கள் பெரம்பூர் தூய லூர்து அன்னை ஆலயம் மற்றும் பிரெசென்டேசன் கான்வென்ட் அமைந்திருக்கும் இடம் ஆகியவற்றை மையமாக வைத்துத் தங்களது வாழ்விடங்களை அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். பியர் ஷாப் ரோடு, பல்லார்டு தெரு, பாக்சன் தெரு முதலிய பெரம்பூர் தெருக்களின் பெயர்களிலேயே ஆங்கிலேய வாசனை வீசுகிறது. ஆங்கிலோ இந்தியர்களும் இங்கு கணிசமான எண்ணிக்கையில் வாழ்ந்து வருகிறார்கள். சென்னை சாந்தோம் பகுதியும் ஆங்கிலோ இந்தியச் சமூகத்தின் அடையாளம் என்று சொல்லலாம். மூன்றாவதாக ஆங்கிலோ இந்தியச் சமூகத்தின் அடர்த்தியைப் பறங்கி மலையில் காணலாம். செயின்ட் தாமஸ் மலையின் அடிவாரத்திலிருந்து மேலே செல்லச் செல்ல ஆங்கிலோ இந்தியக் குடும்பங்கள்தான் கண்ணில் படும். பிரிட்டிஷ் இந்தியாவில் ராணுவத்தில் பணியாற்றிய ஆங்கிலேயர்களின் வழித்தோன்றல்கள் வாழ்கிற இடம் இம்மலைப்பகுதி. பல்லாவரத்தில் இயங்கி வந்த 'Veteran Lines' ராணுவப் பிரிவில் பணியாற்றிய ஆங்கிலோ இந்தியர்களுக்கும் தாமஸ் மலைக்கும் இடையறாத பிணைப்பு இருந்து வருகிறது.



இந்த நூற்றாண்டின் தொடக்கம் முதலே சென்னையின் ஆங்கிலோ இந்தியச் சமூகம் ஆஸ்திரேலியாவுக்கு இடம் பெயரத் தொடங்கிவிட்டது. ஆஸ்திரேலிய நாவலாசிரியரான நிக்கோலா மார்ஷ் என்கிற ஆங்கிலோ இந்தியப் பெண் சென்னையிலிருந்து நாடு கடந்தவர். உலகம் முழுவதும் இவரது சுவாரஸ்யமான எழுத்தை ஒரு பெரும் கூட்டம் படித்து மகிழ்ந்து வருகிறது.

தட்டுத் தடுமாறித் தமிழ் பேசும் இந்தச் சமூகத்திலிருந்து தமிழ்த் திரையுலகில் நடிகையாகவும் பின்னனிப் பாடகியாகவும் உருவெடுத்திருக்கிறார் நடிகை ஆண்ட்ரியா ஜெர்மையா. மேடை நாடகங்களில் நடித்து வந்தஆண்ட்ரியா 2005இல் ‘கண்டநாள்முதல்’ படத்தில் சிறப்பு தோற்றத்தில் வந்தார். 2007இல் ’பச்சைக்கிளி முத்துச்சரம்’ படத்தில் நடிகையாக அறிமுகமானவர். 2010இல் ‘ஆயிரத்தில் ஒருவன்’, பின்னர்கமலஹாசனின் ‘விஸ்வரூபம்’, வெற்றி மாறனின் ‘வடசென்னை’ என இவரது திரைப்பயணம் தொடர்ந்தது. நடிகையானது விஷயமல்ல, தமிழ்த் திரைப்படங்களில் அவர் பிண்ணனிப் பாடகியாகிப் புகழ்பெற்றது ஆங்கிலோ இந்தியச் சமூகத்தின் கலாசார மாற்றத்தின் நேரடி சாட்சி. புஷ்பா படத்தில் ஆண்ட்ரியா பாடிய ‘ஊம் சொல்றியா மாமா. ஊகூம் சொல்றியா மாமா’ என்ற தரை லோக்கலான பாடல் வைரல் ஆகியது. ‘தேகமெல்லாம் மோகம் முற்றி திருடப் பார்க்கும் ஆம்பள புத்தி’ என்பது போன்ற வரிகளுக்காக இந்தப் பாடல் சர்ச்சைக்கும் உள்ளானது.

இந்தப்பாடலுக்கு நடனமாடிய நடிகை சமந்தாவும் ஆங்கிலோ இந்தியப் பெண். அவரது அம்மா ஆங்கிலோ இந்தியர். அவரது தாய்மாமன் ஆன்டி மர்ரே சென்னை விமான நிலையத்தில் சவுதி ஏர்லைன்ஸ் நிறுவனத்தில் பணிபுரிந்து வந்தார்.

அல்கபர்க் ஆதரவளித்து உருவாக்கிய ஆங்கிலோ இந்தியச் சமூகத்தின் பண்பாடுகள் கரைந்து, ஆண்ட்ரியாவின் தமிழோசை தமிழகமெங்கும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. இன்று சென்னையில் சுமார் ஆயிரம் ஆங்கிலோ இந்தியக் குடும்பங்கள் இருக்கலாம். அந்தக் குடும்பங்களில் இந்தியத் தன்மை குடியேறியிருக்கலாம். பொது நீரோட்டத்தில் மூழ்கியிருக்கலாம். ஆனால், ஆங்கிலோ இந்தியர்களின் முகத்தில் காணப்படும் கனிவு மட்டும் காணாமல் போகாது.

(தொடரும்)

சந்தியா நடராஜன்
<sandhyapathippagam@gmail.com>

# ஊடகமும் அரசியலும் காலாவதியான நிலையில் இலக்கியமே பெரும் ஆசுவாசத்தைத் தருகிறது

**ப. தெய்வீகன்**

நேர்கண்டவர்: **கருணாகரன்**

தமிழிலக்கியத்தின் புதிய முகங்களில் ஒன்றாக இருக்கும் ப. தெய்வீகன், ஈழத்திலிருந்து புலம் பெயர்ந்து அவுஸ்திரேலியாவில் (மெல்பேர்ணில்) வாழ்கிறார். பத்திரிகையாளராகத் தன்னுடைய எழுத்துப் பயணத்தை ஆரம்பித்த தெய்வீகனின் வாசிப்பு, எழுத்து, உரையாடல், சிந்தனை எல்லாமே இப்பொழுது இலக்கியம்தான். நட்புச் சூழலும் கூட இலக்கியத்தினுடனேயே வலுத்துள்ளது. அதற்குச் சான்றாக தெய்வீகனின் கதைகள் உள்ளன.

நாம் அறிந்திராத புதிய திணையில் - அவுஸ்திரேலியச் சூழலில் - தெய்வீகனின் கதைகள் பொலிகின்றன. ஈழம், ஈழ அரசியல், புலப்பெயர்வு, அதன் துயரங்கள் எனத் தமிழ்ப்பரப்பின் வழமைக்குள் தன்னையும் தன் எழுத்துகளையும் மட்டுப்படுத்திக் கொள்ளாமல், பொதுப்பெருவெளியில் தன்னுடைய பயணத்தை நிகழ்த்துகிறார். அவுஸ்திரேலியப் பூர்வ மக்கள், அவுஸ்திரேலியாவில் குடியேறிய பிற சமூகத்தினர், அவுஸ்திரேலியாவிலும் அதற்கு வெளியேயும் உள்ள ஈழத்தமிழரின் வாழ்க்கை எனச் சகல தளங்களிலும் ஊடுருவித் தன்னுடைய கவனத்தை ஊன்றி எழுதுகிறார். மொழிதலில் - வெளிப்பாட்டில் சற்று வேறானதொரு வேகமும் சுவையும் தெய்வீகனின் அடையாளம். இதுவரையில் 'அமீலா', 'உன் கடவுளிடம் போ' (தமிழினி வெளியீடுகள்) என இரண்டு சிறுகதை நூல்களும் உலகளாவிய அகதிகளின் நிலையைச் சொல்லும் 'நாடற்றவர்களின் கடவுச் சீட்டு (ஆனந்த விகடன் வெளியீடு) என்ற நூலும், 'காலியாக்கப்பட்ட நாற்காலியில் அமர்ந்திருக்கும் புலி' என்ற அரசியற் கட்டுரை நூலும், 'பெய்யெனப் பெய்யும் வெயில்' என்ற பத்திகளின் தொகுப்பும் வெளியாகியுள்ளன.

இந்த நேர்காணல் தொலைபேசி, இணையம் ஆகியவற்றின் வழியே நிகழ்த்தப்பட்டது.

*ஊடகம், அரசியல், இலக்கியம் எனத் தொடரும் உங்களுடைய பயண வழியில் எதை நீங்கள் சிறப்பாக கருதுகிறீர்கள்?*

இலக்கியம் எப்போதும் மனதளவில் பெரும் ஆசுவாசத்தைத் தரக்கூடியது. நான் தனியாகக் களிக்கும் ஊஞ்சல் போன்றது. என்னையும் தன்னையும் ஒருமித்த புள்ளியில் வைத்து உற்சாகமான இரகசிய உரையாடல்களைச் செய்யக்கூடியது. ஆக, இலக்கியத்தை எனக்குப் பிடித்த வேறெந்த விடயங்களுடனும் ஒப்பீடு செய்யக்கூட எண்ணியதில்லை.



ஊடகமும் அரசியலும் எனது ரௌத்திரத்தின் வெளிப்பாட்டுக்கான பெருவெளியாகவே ஆரம்பம் முதல் அமைந்து வந்திருக்கின்றன. பெரும் உண்மைகளையும் நேரடியாக அறச்சீற்றங்களையும் பதிவு செய்வதற்கான மெய் நிகர் களங்களாக ஊடகமும் அரசியலும் செயலாற்றும் என்ற நம்பிக்கை, எனக்குள் முன்பு இருந்தது போல இப்போது இல்லை.

ஊடகத்துறையை சுமார் இருபது வருடங்களுக்கு முன்னர் நான் தேர்ந்தெடுத்துக்கொண்ட காலம், இப்போது முற்றிலும் வேறொன்றாகிவிட்டது. ஊடகவியலும் சரி, அதன் பரிணாமங்களும் சரி வேறு தளங்களுக்குள் கூடு பாய்ந்துவிட்டன. சமூக வலைத்தளங்களின் வழியாகச் சாகுபடியாகும் பல்லாயிரக்கணக்கான செய்திகளினால், எது ஊடகம் என்பதை உய்த்தறிவதே பெரும் சிக்கலாகிவிட்டது. நாம் புழங்கும் தமிழ் ஊடகங்கள் மாத்திரமல்ல, வேற்று மொழி - வெளி நாட்டு - ஊடகங்களுக்கும் இதேநிலைதான். ஆனால், சமகால சகதிகளில் இருந்து வெளியேறி, ஊடகவியலின் அறத்தையும் விசித்திரமான மாற்றங்களையும் உள்வாங்கிக்கொள்வதற்கு, வெளிநாட்டு

ஊடகங்கள் பல்வேறு ஆரோக்கியமான வழிகளை நாடுகின்றன. ஆனால், தமிழ் ஊடங்கள்/ஊடகவியல் அவ்வற்றிலிருந்தெல்லாம் பல கிலோ மீற்றர்கள் பின்னுக்கு நிற்கின்றன.

இதேபோல, காலாவதியான - கவலைக்குரிய - களமாகத்தான் நான் புழங்கத்தொடங்கிய இலங்கை அரசியலும் இன்று அழுகிவிட்டதாக உணர்கிறேன். தேவையான - பெறுமதியானவர்களின் - வெளியேற்றமும் வெற்றுக்கூச்சல்களுடன் குதியாட்டம் போடுபவர்களின் வரவும் இலங்கை அரசியல் தொடர்பில் பெரும் அயர்ச்சியையும் ஏமாற்றத்தையும் தந்துவிட்டன. சமூகத்துக்கான அரசியல் வழி - பிழைகள் எல்லாவற்றின் மீதும் முன்னர் பட்ட கோபங்களையும் அவற்றுக்குப் பெறுமதியிருக்கும் என்று எழுதியவற்றையும் எண்ணும்போது, இப்போதும் பெரும் துயரமே எஞ்சுகிறது.

ஊடகம் - அரசியல் இரண்டிலும் இலங்கைக்கு வெளியில்தான் அண்மைக்காலமாக அதிக ஆர்வம் கொண்டிருக்கிறேன். அவை தொடர்பிலான தொடர்ச்சியான வாசிப்பு எனக்குள் புதிய உலகங்களைக் காண்பிக்கிறது. அந்த உலகம், நான் எப்போதும் லயித்திருக்கும் இலக்கியத்துக்கு அண்மித்ததாக தெரிவதாக உணர்கிறேன். முன்னர் கூறியதுபோல, அது மிகுந்த ஆசுவாசத்தைத் தருகிறது.

**நீங்கள் கருதுவதைப்போலவே ஊடகமும் அரசியலும் உலகளவிலேயே இன்று மெய்நிகர் களத்தன்மையை இழந்துள்ளது என்ற கசப்போடு - கவலையோடு இந்தத்துறைகளிலிருந்து பலர் வெளியேறி ஒதுங்கிக் கொண்டிருக்கிறார்கள். இலங்கைச் சூழலில் இது இன்னும் மோசமானது என்பதை சமகால நிலவரங்கள் நிரூபிக்கின்றன. இந்த நிலையில் இத்தகைய ஒதுங்கல் - ஒடுங்குதல் சரியானதா ? நீங்கள் இலங்கையில் இருந்திருந்தால் எத்தகைய நிலைப்பாட்டை எடுத்திருப்பீர்கள் ?**

ஊடகவியலை ஜனநாயகத்தின் மூன்றாவது கண், நான்காவதுதூண் என்றெல்லாம் கலைச்சொற்களாக அடுக்கி அழகு பார்த்த காலத்தை, இன்று யதார்த்த நிலைக்கூறுகளின் ஊடாக மதிப்பீடு செய்யவேண்டிய காலகட்டத்திலிருப்பதாக உணர்கிறேன். உலகளாவிய ரீதியில் இடம்பெற்ற புரட்சிகள் - சமூக மாற்றங்கள் - விடுதலைப் பரணிகள் எல்லாவற்றிலும் ஊடகங்களுக்கும் ஊடவியலாளர்களுக்கும் மிகப்பெரிய பங்கு இருந்திருக்கிறது. வரலாற்றின் எல்லாப் பக்கங்களிலும் இதனை நாங்கள் படித்திருக்கிறோம். ஆனால், அங்கெல்லாம் மக்களின் வேட்கையும் அவர்களின் நீதியான போருக்கான ஊடகங்களின் பயணமும் சமாந்தரமாக அமைந்திருக்கிறது. சம விகிதத்தில் கலந்திருக்கிறது. அங்கு ஊடகத்தின் பங்கும் பணியும் மிகப்பெரிய அளவில் தேவைப்பட்டிருக்கிறது.

ஆனால், இன்று அந்த நிலை விரும்பியோ - விரும்பாமலோ, தலை கீழ் மாற்றத்தை அடைந்துவிட்டது. ஜனநாயகத்தின் கூறுகள் எதிர் எதிர்த்திசைகளில் பயணம் செய்வதைத்தான் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

அதற்குக் காரணம், உலகமயமாதலின் உச்சம் ஒவ்வொரு மனிதனையும் இன்று ஒரு அரசாங்கமாக மாற்றிவிட்டது. உங்களுக்கென்று ஒரு அரசாங்கம் தேவையில்லை என்ற நிலை உருவாகிவிட்டது. அரசாங்கத்திற்குத்தான் தனிமனிதன் தேவைப்படுகிறானே தவிர, கனடாவிலிருப்பவனுக்கும் கண்டியிலிருப்பவனுக்கும் கல்வியங்காட்டிலிருப்பவனுக்குமான தேச எல்லைகள் அழிக்கப்பட்டுவிட்டன. சமூக வலைத்தளங்களின் ஊடாக இன்றைய உலகம் எல்லைகளற்ற பெரும் தேசமாகிவிட்டது. கடந்த ஐந்து வருடங்கள்வரை பெரும் கட்டுப்பாடுகளாகவும் நிபந்தனைகளாவும் பேணப்பட்ட மக்களாட்சிக் கூறுகள் முதல் வரலாற்றுப் படிப்பினைகள் அனைத்தும் கேள்விக்குரியவையாகி விட்டன.

உதாரணத்துக்கு, இலங்கையின் குக்கிராமத்தி லிருக்கக்கூடிய ஒரு நபர், அரசாங்கத்தின் எந்தத் தயவுமின்றி, பல்லாயிரக்கணக்கான அமெரிக்க டொலர்களை சம்பாதிக்கக்கூடிய நீதியான வழி முறைகளை இன்றைய உலகம் உருவாக்கிக் கொடுத்துவிட்டது. அதனை அடைவதற்கு நீங்கள் தயாரா என்று காலம் ஒவ்வொருத்தரின் முன்பாகவும் வந்து நின்று சொடுக்குப் போட்டு, வசீகரமூட்டுகிறது.

ஆக, பாரம்பரியமாகப் பேணப்பட்டு வந்த ஜனநாயகத்தின் விழுமியங்களையும் ஊடகவியல் போன்ற முக்கிய துறைகளையும் இன்றைய தலைமுறையினர் சிருஷ்டித்துக் கொண்டிருக்கும் புதிய உலகத்தின் முன்னால் நிறுத்தி, அதற்கான பெறுமதியை அளவிடவேண்டிய கட்டாயத்தில் நாங்கள் இருக்கிறோம். இதுதான் யதார்த்தம். விசுவாசத்தின் அடிப்படையில் பழையவற்றின் மீது பரிதாபத்துடன்கூடிய நெருக்கத்தைப் பேணுவது என்பதுவேறு. நடைமுறை ரீதியில், காலத்தின் அடுத்த படிக்கற்களை எமக்காக அடுக்கி எடுத்துக்கொள்வது என்பது வேறு.

ஊடகம், அரசியல் உட்பட மக்களாட்சித் தத்துவங்கள் அனைத்துக்கும் ஏற்பட்டிருக்கும் பெரும் சவால் இது. ஒவ்வொரு அரசும் இந்தக் குழப்பத்துக்குள் தத்தளிப்பதை கண்கூடாகப் பார்க்கிறோம்.

இதுபோன்றதொரு சூழலில், இன்று நான் இலங்கையில் இருந்திருந்தால், நிச்சயம் பாரம்பரியமான ஊடகவியலில் - பத்திரிகைத்துறையில் - தொடர்ந்திருக்கமாட்டேன்.

தொடர்ச்சியான வாசிப்பு, தேடல், விரிந்த



உலகப் பயணங்கள், அவற்றிற் பெறுகின்ற அறிவனுபவம் எல்லாம் உங்களுடைய இந்த நிலை மாற்றத்துக்குக் காரணமாக உள்ளன. இத்தகைய நிலைமாற்றத்தை தமிழ்ப் பொதுச்சூழல் வேறுவிதமாக - எதிர்நிலையில் பார்க்குமல்லவா? விட்டோடியாக அல்லது எதிர்ச் சிந்தனையாளராக?

நிச்சயமாக இல்லை. 'தமிழ்ப் பொதுச்சூழல்' என்று நீங்கள் கூறக்கூடியவர்கள் உட்பட எங்கள் எல்லோருக்கும் முன்னாலிருக்கின்ற பெரும் சவால் என்ன என்று கேட்டால், முன்னர் நாம் மார் தட்டிய, பெரும்புரட்சித் தத்துவங்களையும் பொருட்கோடல்களையும் எவ்வளவுதூரம், புதிய மாற்றங்களின் முன்பாக ஏற்றுக்கொள்வதற்குத் தயாராக இருக்கிறோம் என்பதே ஆகும். இந்தச் சமரசத்துக்கான புள்ளி ஒவ்வொருவருக்கும் வேறுபடும் என்பதில் தவறில்லை. ஆனால், முன்பு உற்பத்தி செய்தவற்றின் மீதான விசுவாசத்தின் பொருட்டு, அதனையே சமையல் செயவதற்குச் சதா சத்தியம் செய்தபடி நின்றால், அதனை ஆகாரமாக ஏற்பதற்கு இந்த உலகம் தயார் இல்லை என்பதே கசப்பான உண்மை.

கிராமத்திலிருந்து நகருக்கு வருகிறோம். நகரத்திலிருந்து பெரு நகரங்களுக்கு செல்கிறோம். அங்கிருந்து வெளிநாடுகளுக்குப் புலம் பெயருகின்றோம். பொருண்மியக் காரணங்களுக்காக - தனி மனித தேவைகளுக்காக - எங்களை விடுவிப்பதற்கும் விட்டுக்கொடுப்பதற்கும் ஏற்ற விலங்காகப் பழக்கப்படுத்திக் கொள்ளுகின்ற நாங்கள், சமூகமாக சிந்திக்கும்போது வரட்டுத்தன குருட்டுப் பாதையைப் பிடித்துத் தொங்கிக்கொள்வது இங்கிருக்கக்கூடிய பரிதாபமான நிலை.

இது உண்மைதான். ஆனாலும் சில சந்தர்ப்பங்களில் சமூகமாகச் சிந்திக்கும் நிலை தவிர்க்கமுடியாத ஒன்றல்லவா! அதுவும் ஒடுக்குமுறைக்குள்ளாகிய சமூகத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கும்போது இது இன்னும் அழுத்தம் பெறுமே! இங்கே தனிமனித தேவைகளுக்காகச் செய்யப்படும் சமரசங்களையும் சமூகச் சமரசத்தையும் எப்படிச் சமனிலைப்படுத்துவது?

உண்மைதான். ஆனால், தனிப்பட்ட ரீதியிலான சிந்தனைகளும் அதன் செயலாக்கமும்தானே முன்னேற்றகரமான முடிவுகளின் வெற்றிகரமான அடித்தளங்களாக இருப்பதை இன்று கண்கூடாகப் பார்க்கிறோம்,இல்லையா! இதனைப் பெரும் தவறாக உதாரணப்படுத்தி, யாரையும் குற்றவாளிக் கூண்டில் ஏற்றவில்லை. ஈழத்தின் இன்றைய நிலையைப் பாருங்கள். சமூகமாக - ஒருகூட்டு முடிவினால் - உருவாக்கப்படவேண்டியபுதிய அரசியல்செல்நெறிகள் ஏதாவது கடந்த பத்துப்பதினான்கு ஆண்டுகளில் வெற்றிகரமாககண்டு அடையப்பட்டிருக்கின்றனவா? மறுபுறத்தில், தாயகத்தில் உள்ளவர்களுக்கு உதவவிரும்புவதாக சொல்லிக்கொள்ளும் புலம் பெயர்ந்தவர்களினாலாவது பொதுவான கட்டமைப்பு ஒன்றை உருவாக்கி அதன்கீழ் ஒன்றுபட முடிந்திருக்கிறதா? இல்லையே. போரை எதிர்கொண்டவர்களால், போரற்றநிலையை எதிர்கொள்ள - சமாளிக்கமுடியாமல் உள்ளதானது மிகப்பெரிய முரண் அல்லவா?

ஆனால், தனிப்பட்டவர்களின் சிந்தனைகளில் போரற்ற கடந்த பதினான்கு வருட காலத்தில் சொல்லும்படியான செழுமையான திட்டங்கள் ஆங்காங்கே உருவாகியிருக்கின்றன. அவை செயல்வடிவத்தையும் கண்டிருக்கின்றன. அதாவது, இன்றைய உலகம் தனிப்பட்டரீதியில் புத்திபூர்வமானதாகவும் கூட்டு மனநிலையின்போது முட்டாள்தனமாகவும் சிந்திக்கிறது.

இதிலிருந்து விடுபடுவதற்கும் குறைந்தது ஒரு சமநிலையை நோக்கி நகர்வதற்கும் எங்களின் முன்னாலுள்ள அன்றாடங்கள் அனைத்தையும் புதியமுறையில் சிந்திப்பவர்களின்வரவு முக்கியமானது. எந்த விடயத்தையும் கடந்தகால லாப - நட்டக் கணக்குகளின் ஊடாக அணுகாத ஒருதலைமுறையின் நுழைவுதான், சமூகத்தின் தற்போதைய தேவைகளை ஓரளவுக்காவது நிவர்த்தி செய்யமுடியும் என்று நம்புகிறேன்.

'இன்றைய உலகம், தனிப்பட்ட ரீதியில் புத்திபூர்வமானதாகவும் கூட்டு மனநிலையின்போது முட்டாள்தனமாகவும் சிந்திக்கிறது' என்பது ஈழச்சூழலில் மிகப் பொருந்துகிறது. இங்கே கூட்டுமனநிலை பெரும் பொய்யாகவும் மாயைகளின் மீது கட்டமைக்கப் பட்டதாகவும் உள்ளது.தனிப்பட்ட வாழ்க்கையை வேறாகவும் அதற்குமாறாக பொதுவாழ்க்கையை அல்லது கூட்டுமனநிலையை வேறாகவும் பராமரிப்பதன்நோக்கம்-தேவை-அரசியல்என்ன?

பெரும் நெருக்கடிகளுக்குள்ளிருந்து விடுபடுகின்ற மக்கள் சமூகம், கூட்டு மனநிலையிலிருந்து விலகி, தனியான - சுயநலம்மிக்க - பாதைகளைத் தேடிக்கொள்வது வழக்கம். அதுபோல, உலக ஒழுங்குகளில் ஏற்படுகின்ற பாரிய அதிரடியான மாற்றங்களும் மக்களைத் தனித்தனியாகசிந்திப்பதற்கு உதைத்துவிடுவது இயல்பு. இவ்வகையான பயணங்களின்போதுதான், மேற்குறிப்பிட்ட முரணியக்கத்தை அவதானிக்கக்கூடியதாக உள்ளது.

உதாரணத்துக்கு, வெளிநாடுகளுக்கு புலம் பெயர்கின்ற பெரும்பாலானவர்கள் இங்குள்ள அரசுகளுக்கு எதிரான இடதுசாரி முகாம்களுக்குள்ளிருந்து தமக்கான உரிமையை வேண்டிப் போராடுவார்கள். அகதிகள் முகாமிலுள்ளவர்களை விடுவிக்க வேண்டுமென்பார்கள். தாங்கள் விட்டுவந்த நிலத்தில் உள்ள மக்களுக்கு வெளிநாட்டு அரசுகள் உதவவேண்டும் என்றுகூடப் போராட்டம் நடத்துவார்கள். முதலாளித்துவ மனநிலையிலிருந்துவெளியேறி உழைக்கும் மக்களுக்கு உதவவேண்டும் என்று முதலாம் உலகநாடுகளுக்கு ஆலோசனையெல்லாம் கூறுவார்கள்.

ஆனால், இவ்வாறு போராடுபவர்கள் - குரல் எழுப்புறவர்கள் - அனைவருக்கும் இந்த நாட்டில் குடியுரிமையும் இருப்புக்கான நிரந்தர பொருளாதார வளங்களும் கைகூடுகின்றபோது, இவர்கள் வர்க்கம் - சாதிபோன்ற எல்லா கசடுகளையும் சூடிக்கொண்டு, மேலாதிக்கர்களாக உருவாகிறார்கள். முழுமையான லிபரல் விழுமியங்களோடு விஸ்வரூபமெடுக்கிறார்கள். லிபரல் கட்சிகளில் சென்று ஆசனம்கேட்டு,தேர்தலில் போட்டியிடவும்கூடச் செய்கிறார்கள்.

தற்கால உலகில் தங்களின் இருப்புக்கான நிரந்தர நிம்மதி, இப்படியானஅர்த்தநாரீஸ்வர சூத்திரத்தில்தான்அடங்கியிருப்பதாக மக்கள் உணர்வதன் வெளிப்பாடுதான் இது என்று நம்பத்தோன்றுகிறது. இதன் நீட்சி ஒருபோதும் ஆரோக்கியமான சமூகத்தை உருவாக்காது.

ஊடகம், அரசியல் இரண்டையும் விட்டு இலக்கியத்தின் பக்கம் முழுதாகச் சாய்ந்து விட்டதாகவே உங்களுடைய தற்போதைய எழுத்துகளும் பங்கேற்புகளும் மாறியுள்ளன. உங்களுடையபிந்திய கதைகள் அவுஸ்திரேலியத் தன்மையை நோக்கிச் செல்கின்றன. அவுஸ்திரேலியாவுக்கு வருகின்ற அகதிகள், அவுஸ்திரேலியப் பூர்வமக்கள், அவுஸ்திரேலியச் சூழல், அங்குள்ள வாழ்க்கை மற்றும் அரசியல் - பண்பாட்டு நெருக்கடிகள், சிறப்புகள் பற்றியதாக. இதற்கான சிறப்புக் காரணங்கள் ஏதுமுண்டா?

புலம் பெயர்ந்தவர்களின் இலக்கியங்கள் எப்போதும்ஊர்பற்றிய நினைவுகளாகவே பதியப்பட்டு வந்தகாலம் தற்போது கொஞ்சம் கொஞ்சமாக மாறிவருகிறது. மாறவேண்டிய காலம் வந்துவிட்டது என்றுகூடக் கூறலாம்.

நினைவிடைதோய்தல் என்ற இலக்கியப்போக்கு



புலம்பெயர் எழுத்துக்களாய் இன்னும் நிறைந்துள்ளன என்பதும் உண்மையே. இனியும் அது வெவ்வேறு தளங்களில் புதுவழிகளில் நிறைவளிக்கும். ஆனால் புலம் பெயர்ந்த மண்ணில் இருக்கக்கூடிய முரண்பாடுமிக்க வாழ்வியல் சூழலை - அரசியல் குழப்பங்களை - கலாச்சார மோதல்களை - இங்குள்ள பூர்வகுடிகளை - நுட்பமான அவதானங்களின் வழியாக எழுத்துக்களில் கொண்டுவருவதென்பது ஒரு எழுத்தாளனுக்கு இன்னொரு வகையில் சவாலானது. அவசியமானது.

ஒரு புலம்பெயரி சந்திக்கும் கலாச்சார உள்மோதலும் அதனை இலக்கியத்தின் வழியாக வெளிப்படுத்துவதற்கு மேற்கொள்ளும் எத்தனமும் தாயின் கருப்பையினுள் நுழைந்து, மீண்டும் பிறப்பெடுப்பது போன்றது. இதனைத் தனியே மொழியாலும் சம்பவங்களாலும் உருட்டி விளையாடி ‘பாவ்லா’ பண்ணிவிட முடியாது. இப்படியான தவப்பேறில் கிடைக்கின்ற கதைகளை எழுதுவதற்கே நான் பெரிதும் விரும்புகிறேன்.

ஏனெனில் நான் இருப்பது ஆஸ்திரேலியாவில். நான் எழுத விரும்புகின்ற கதை தமிழகத்திலோ ஈழத்திலோ நிகழக்கூடிய சாத்தியமிருப்பின், அப்படியான கதையை எழுத நான் இயன்றவரையில் தவிர்க்கவே விரும்புவேன். இன்னும் சொல்லப்போனால், நான் எழுதக்கூடிய கதைகளுக்கு எனது எழுத்துக்களை மாத்திரமே சவாலாக முன்னிறுத்துகிறேன். அவற்றின் நீட்சியாக, ஆஸ்திரேலிய பூர்வகுடிகளின் வாழ்வு, அவர்களுக்கும் எங்களுக்குமான உணர்வுரீதியான ஒற்றுமைகள் - விலகல்கள் என்று பலவற்றை, கதைகளுக்குள் கொண்டுவரப் பார்க்கிறேன்.

**அநேகமாக எல்லோருக்கும் தெரிந்த பரப்பில் தெரிந்த விடயங்களை மீட்டுவாக்கம் செய்வதைப்போல ஈழப்போரையும் அதன் எழுச்சி, வீழ்ச்சிகளையுமே திரும்பத்திரும்பச் சிலர் எழுதிக்கொண்டிருக்கிறார்கள். போரிலிருந்து தப்பித்து வாழ்ந்து கொண்டு போரைப் பற்றியே எழுதித் தருவது எந்த வகையில் நியாயமானது?**

போர் நெடி தீராத நிலத்திற்கு ஏராளம் கதைகள் உள்ளன. ஈழம் என்பது எத்தனை நூற்றாண்டுகள் கடந்தாலும் ஒரு போர் நிலம். அந்த நிலத்தின் குருதிவாடை நிரந்தரமானது. அந்த நிலத்தின் கதைகளை ஈழத்தவர்களால் மாத்திரமே ஆத்மார்த்தமாக பதிவுசெய்யமுடியும் என்பதில் அசைக்கமுடியாத நம்பிக்கை உடையவன் நான்.

ஈழத்தின் எழுத்துக்கள் பற்றி பேசுவதற்கு உதாரணமாக ஆஸ்திரேலியாவை எடுத்துக்கொள்வோம். ஆஸ்திரேலியாவில் அபொறிஜினல் ஆதிக்குடிகள் தொடர்பாக எத்தனையோ கதைகள் எழுதிக்குவிக்கப்பட்டன. அவர்களை பரிவு தேடும் சமூகமாக சித்தரித்தார்கள். அவர்கள் மீதான போருக்கு காரணம் சேர்த்தார்கள். வரலாற்றை குழப்புவதற்கு தேடித் தேடி கதைகளைச் சோடித்தார்கள். ஆனால், இன்று அடக்கப்பட்டவர்களின் தரப்புக் கதைகள் வெளிவரத்தொடங்கியுள்ளன.

மாறி மாறி வருகின்ற அரசுகள் மன்னிப்பு கேட்டு தலைகுனியுமளவுக்கு பல நூற்றுக்கணக்கான வருடங்களுக்கு முன்னர் இடம்பெற்ற பெருங்கொலைகள் சத்தியத்தின் முன்பாக வைத்துக் கேள்விக்குள்ளாக்கப்படுகின்றன. இப்போதெல்லாம், இங்கு கலை - இலக்கியம் உட்பட எந்தச்செயற்பாட்டுக்கும் அபொறிஜினல் மக்களின் வரலாற்றினை பயன்படுத்துவதற்கு அனுமதி பெறவேண்டும். வரலாற்றை திரிபுபடுத்தவோ - குழப்புவதற்கோ - கடும் தடைகள் நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளன.

இதுபோல, ஈழத்தின் போர் வெக்கையானது காலம் கடந்தபின்னரும் எழுத்துக்களில் உண்மையுடனும் பொறுப்புடனும் பதியப்படவேண்டும். பகிரப்படவேண்டும். அதற்கு அந்தப்போர் தொடர்பான (எதிர் - ஆதரவு என்ற) பிரச்சார மனநிலையிலிருந்து வெளியேறும் இலக்கியப்பக்குவம் வாய்க்கப்பெறுவது எழுத்தாளர்களுக்கு அவசியமாகிறது. இது ஈழ இலக்கியத்தின் பண்புநிலையாக மாற்றமடையவேண்டும்.

புலம்பெயர் இலக்கியமும் போர் இலக்கியமும் ஈழ எழுத்துக்களின் பிரதான முகங்களாக முன்னிறுத்தப்படுகின்ற அதேவேளை, ஈழத்தில் நிலவும் வர்க்க விரோதங்கள், சாதிய குரோதங்கள் போன்றவற்றையும் எழுத்துக்களில் அழுத்தமாக பதிவுசெய்யவேண்டும். சம்பவங்களை நேரடியாக எழுதிவிட்டு, பெயர்களை மாற்றிவிட்டால் அது புனைவு என்று நம்புகின்ற மூடநம்பிக்கை முதலில் ஒழியவேண்டும்.

ஈழத்தின் எழுத்துமொழியிலும் விட, பேச்சு மொழியை எல்லோரும் பெருமையோடு போற்றிக் கொண்டாலும் இலக்கியத்தில் இந்தப்பேச்சுமொழி தொடர்பான வித்தியாசங்கள் போதுமானளவு பதிவாகவில்லை. ஈழத்தின் வட்டார வழக்குகளை செறிவாகப்பேணும் பிரதிகள் வரவில்லையென்றே சொல்லலாம். இதற்கான வாய்ப்புக்கள் இனியாவது உருவாகவேண்டும்.

**அவுஸ்திரேலியா ஒரு பல்கலாச்சார நாடு. ஜனநாயகச் சிறப்புக்குரிய தேசம் என்றாலும் கூட அகதிகள் விடயத்திலும் பூர்வமக்களின் உரிமைகளிலும் கடுமையான விமர்சனங்களைக் கொண்டுள்ளதே. இதைக்குறித்த கலை, இலக்கிய வெளிப்பாடுகள்?**

நவ ஆஸ்திரேலிய தேசம் எனப்படுவது எண்ணுக்கணக்கற்ற படுகொலைகளின் வழியாக - மாபெரும் அழிவின் முடிவில் - உருவாக்கப்பட்ட நாடு. டொலர்களால் ஆசீர்வதிக்கப்பட்டு சகல சௌந்தர்யங்களாலும் தன்னை நிறைத்துக் கொண்டுள்ளபோதும் ஆஸ்திரேலியா இன்றைக்கும் தனது பழைய கறைகளைக்கழுவிக்கொள்ளமுடியாமல் - பூர்வீக மக்களின் குருதிவாடையோடுதான் - எந்த மேடையிலும் ஏறவேண்டியிருக்கிறது. 1967 ஆம் ஆண்டுவரையில், ஆஸ்திரேலிய பூர்வகுடிமக்களுக்கே ஆஸ்திரேலிய குடியுரிமை வழங்கப்படாதளவுக்கு, நவ ஆஸ்திரேலிய அரச இயந்திரம் மூக்கமுட்ட நிறவாதத்தைப் பருகிய மிதப்பில் ஆட்சிசெய்துகொண்டிருந்த நாடு இது. ஆனால், இந்த நிலமை இன்று வடிந்துவிட்டபோதிலும் தங்களது பழைய குற்ற உணர்வினை மிகக் கெட்டித்தனமாக அவர்கள் கையாளுகிறார்கள். அரசியல் ரீதியாக பூர்வ குடிகளிடம் பகிரங்கமாக மன்னிப்புக்கேட்டது முதல் எத்தனையோ வழிமுறைகளைத் தொடர்ந்து கையாண்டுவருகின்றார்கள். மன்னிக்க முடியாதளவு குற்றங்களை இழைத்துமுடித்துவிட்டு, மன்னிப்பினை வழங்க முடியாதளவுக்கு பூர்வ குடிமக்களின் அரசியல் சிந்தாந்தங்களை - சிந்தனைகளை சிதைத்துவிட்டு, அவர்களிடம் தாங்கள் தொடர்ந்தும் மண்டியிடுவதுபோன்றபிரமையைநாட்டுமக்களுக்கும் வெளியுலகுக்கும் தொடர்ந்தும் முன்னிலைப்படுத்திக் கொண்டேயிருக்கிறார்கள். தங்களது பணிவையும் கனிவையும் பண்பட்ட ஆயுதங்களாக பயன்டுத்த தேர்ந்தவர்களாக, அரசியலைக் கையாளுபவர்கள் ஆஸ்திரேலியர்கள். அகதிகள் விடயத்துக்கும் இது பொருந்தும். ஆஸ்திரேலியாவின் பழைய விந்தில் பிறந்த புதிய குழந்தைதான் அகதிகளுக்கு எதிரான அவர்களது கொள்கை.

ஆனால், ஆஸ்திரேலிய இலக்கியம் இவற்றை இப்போதுதான் - கடந்த இரண்டு தசாப்தங்களாக - முனைப்புடன் பதிவு செய்ய ஆரம்பித்திருக்கிறது. ஆஸ்திரேலிய இலக்கியம் என்பது எது என்பதில் பல குழப்பகரமான கருத்து நிலைகள் இங்கு நிலவியது. இன்னும் நிலவுகிறது என்றுகூட சொல்லலாம். ஐரோப்பிய, ஆபிரிக்க இலக்கியங்கள் போன்ற செழுமையும் தனித்துவமும் ஓர்மமும் ஆஸ்திரேலிய கலைப்படைப்புக்களில் பெரியளவில் வெளிப்படவில்லை. ஆஸ்திரேலியாவின் முக்கியம்வாய்ந்த - உயரிய - இலக்கிய விருதுகளுக்கான தேர்வு நிபந்தனைகள், உனது ஆஸ்திரேலிய வாழ்க்கையை எழுது என்ற பன்மைத்துவத்துக்கான வரவேற்புக் குரலாகவே அமைந்திருக்கிறது. ஆக, புலம்பெயர்ந்தவர்களின் வாழ்க்கை, அவர்களுக்குள் ஏற்பட்ட பண்பாட்டு - கலாச்சார மோதுகைகள் ஆகியவைதான், இற்றைவரை கணிசமானளவு இலக்கியப் பிரதிகளாக வெளிவந்தவண்ணமுள்ளன.

இந்த வழக்கமான வட்டத்திற்கு வெளியே வந்த புலம்பெயர்ந்தவர்களின் பிரதிகள் அண்மைக்காலங்களில் விருதுகளுக்குத் தெரிவாகியதுடன் பரவலான கவனத்தையும் பெற்றுள்ளன. ஆஸ்திரேலியாவின் மிக உயர்ந்த - Miles Franklin - இலக்கிய விருதினை இந்த ஆண்டு வெற்றிக் கொண்டுள்ள சங்கரி சந்திரனின் Chai Time at Cinnamon Gardens என்ற நாவல் நவ-ஆஸ்திரேலிய சிந்தனையின் போலித்தனங்களை கேள்விக்கு உட்படுத்தியிருக்கிறது. Chai Time at Cinnamon Gardens நாவலின் மூலம் சங்கரி முன்வைத்திருக்கும் அதி முக்கிய கேள்வி - இந்த நாட்டில் ஆஸ்திரேலியக் குடிமகனாக வசிப்பது என்பது எவ்வாறு? அதனை யார் தீர்மானிப்பது?

அதேபோல, ஆஸ்திரேலிய அரசினால் புகலிடக்கோரிக்கை நிராகரிக்கப்பட்டு நீண்டகாலமாகக் குடிவரவு அமைச்சின் தடுப்பிலிருந்த ஈரானிய எழுத்தாளர் பெஹ்ரூஸ் பூச்சானி தடுப்பிலிருந்துகொண்டு ஆஸ்திரேலிய அரசு தனக்கு இழைத்துள்ள கொடுமைகளை No Friend But the Mountains என்ற பெயரில் எழுதிய நூலுக்கு 2019 ஆம் ஆண்டு விக்டோரிய அரசாங்கத்தின் இலக்கியத்திற்கான உயரிய விருது வழங்கப்பட்டது. அப்போதுகூட அவர் தடுப்பிலிருந்து விடுவிக்கப்படவில்லை.

புலம்பெயர்ந்த எழுத்தாளர்கள், பூர்வகுடி மக்களின் அபிலாஷைகளுடன் இணைந்து நிற்கின்ற ஒரு புள்ளி ஆஸ்திரேலிய இலக்கியத்தில் சிறிது சிறிதாக வளர்ச்சியடைய ஆரம்பித்திருக்கிறது. இந்த இலக்கியம், மீட்பு இலக்கியமாக - குரலற்றவர்களுடன் இணைந்துகொள்ளும் கூட்டு இலக்கியமாக



பரிணமிக்கும் வாய்ப்பிருக்கிறது.

**அவுஸ்திரேலிய இலக்கியத்தில் இயங்கும் தமிழுக்கு அப்பாலான பிற மொழியினரோடு உங்களுக்கும் பிற தமிழ் எழுத்தாளர்களுக்கும் உள்ள தொடர்புகள், அவதானங்கள்?**

ஆஸ்திரேலியாவிலுள்ள தமிழர்கள் அல்லாத எழுத்தாளர்களிடம் நான் அவதானித்த பொதுமையான பண்பு, தங்களது தாயகத்துடனான விடுபடல்களை,புதிய நிலத்தில் சந்திக்கின்ற பண்பாட்டு முரண்களை, கலாச்சார அழுத்தங்களை தங்கள் எழுத்துக்களுக்குள் பத்திரப்படுத்துவதில் அவர்கள் தீவிரமாக உள்ளார்கள். அதாவது, ஆப்கானிஸ்தான், ஈராக், ஈரான், பர்மிய எழுத்தாளர்களிடம் இந்தப் பண்பு உள்ளது. எழுத்துக்களுக்கு அப்பால், இந்த சமூகங்கள் அனைத்திடமும் காட்சிக்கலை மீது அதிக ஆர்வமிருக்கிறது. குறும்படங்களின் ஊடாக தாங்கள் சொல்ல வருகின்ற செய்தியை முன்வைப்பதில் இவர்கள் கூடுதல் ஆர்வம் காண்பிக்கிறார்கள்.

வட இந்தியர்கள் பொதுவில் கவிதைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். ஹிந்தி மொழி செவ்வியல் கவிதைகளை மீள் வாசிப்புச் செய்கின்ற சந்திப்புக்களை நடத்துகிறார்கள். அவர்களது கவிதை வாசிப்பு முறையே தமிழுக்குப் புதிததாகத் தெரிகிறது. கவிதை வாசித்துக்கொண்டிருக்கும்போது, கேட்டுக் கொண்டிருக்கிப்பவர்கள் இடையிடையே, கவிதையைப் பாராட்டி ஏகமாய் ஒலி எழுப்புவதும் அதற்கேற்ப வாசிப்பாளரும் குறிப்பிட்ட வரிகளை மீளப்படித்து,இயைந்து செல்வதும் என்று அவர்களின் கவிதை முகாம்கள் சுவாரஸ்யம் மிகுந்தவையாக காணப்படுகின்றன.

ஆஸ்திரேலியாவின் பூர்வீக எழுத்தாளர்கள் புதிதாக நாவல் - கவிதை - சிறுகதை வடிவங்களுக்குள் வந்தவர்கள். ஆபிரிக்க கறுப்பினத்தவர்களின் இலக்கியம்போன்ற நேர்த்தியான பின்னணி ஆஸ்திரேலியப் பூர்வீக மக்களுக்குக் கிடையாது. ஆஸ்திரேலிய பூர்வீக குடிகள் தங்கள் வாழ்க்கையை இயற்கைக்கு ஒப்புக் கொடுத்தவர்கள். பாதைகளில் - பாறைகளில் - மரங்களில் வரி வடிவங்களாக ஓவியங்கள் வரைவது,வாய் வழி கதைகளாக தங்களது வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் சொல்வது போன்ற பண்பாட்டு வழிகளின் ஊடாக, தங்களது கலாச்சாரத்தை சேகரப்படுத்துபவர்கள். காலனித்துவ ஆட்சிக்குப் பிறகுதான் பூர்வீக மக்களிடையே நாவல் - கவிதை - சிறுகதை வடிவங்கள் சிறிது சிறிதாகப் புளங்கத்தொடங்கியிருக்கின்றன. அவர்களின் இலக்கியங்களில், கூடுதலாக இயற்கையுடனான தங்கள் ஊடாட்டத்தை, இயற்கையை தெய்வமாக வழிபடுகின்ற அமானுஷ்யத்தை பதிவு செய்து, அதிலிருந்து மருவி, தங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகள் குறித்து தற்போதுதான் எழுத்தில் பேச ஆரம்பித்திருக்கிறார்கள். அவர்களுடனான தொடர்பில்உணர்ந்துகொண்டது, அவர்களின் மூதாதையருக்கு நிகழ்ந்த கொடிய வடுக்களை நேரடியாகப் பேசிவிடமுடியாது. பேசவும் கூடாது. தங்களை யாரும் பரிதாபத்துடன் பார்ப்பதை அவர்கள் அறவே நிராகரிக்கிறார்கள். தங்களைக் காட்சிப்பொருளாக அணுகும் யாரையும் அவர்கள் வெறுக்கிறார்கள்.

ஆஸ்திரேலிய வெள்ளையினத்தவர்களின் எழுத்துக்களில் தனித்தன்மையை அவதானிக்க முடிவதில்லை. அவர்கள் எழுதுகின்ற இலக்கியம் இயல்பாக - கூர்மையாக -அமையப்பெற வேண்டுமென்றால், தங்களின் முன்னோர்கள் இழைத்த கொடுமைகளை - பூர்வ குடிமக்கள் மீது தொடுத்த போரைத்தான் பதிவு செய்யவேண்டும். அது மன்னிப்புக் கோரும் இலக்கியமாக - குற்ற உணர்விலிருந்து - எழுதப்படவேண்டும். அவர்களின் ஆழ் மனதில் தோன்றுகின்ற தூய உணர்வின் வெளிப்பாடாக அமையவேண்டும். அப்படியான பிரதிகள் எதுவும் வெளியாகி உலுப்பிக் கொண்டதாக நான் கேள்விப்படவில்லை.

அந்தப் பணியை இயன்றளவு, இந்த நாட்டுக்குப் புலம்பெயர்ந்து வந்தவர்களே செய்துகொண்டிருக்கிறார்கள்.

**உங்களுடைய ‘ஆழியாள்’, ‘மார்ட்டினா’, ‘புலரியில் மறைந்த மஞ்சள் கடல்’, ‘அவனை எனக்குத் தெரியாது’ போன்ற கதைகள் புதிய அறிதற் பிராந்தியத்தைத் திறக்கின்றன. இப்படியான புதிய தெரிவுகளில் உங்களுடைய**

கவனம் எப்படித் திரும்பியது?

'அவனை எனக்குத் தெரியாது' சிறுகதை, ஆஸ்திரேலிய தமிழ் இளைஞன் மயூரன் சுகுமாரனுக்கு இந்தோனேஷியாவில் நிறைவேற்றப்பட்ட மரண தண்டனையை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது. அந்த மரண தண்டனை என்னை மிகவும் பாதிப்புக்குள்ளாக்கிய சம்பவம். ஒரு தமிழனுக்கு வழங்கப்பட்ட மரண தண்டனை என்பதற்கு அப்பால், 'நான் திருந்திவிட்டேன் என்னை உயிர் வாழ விடுங்கள்' என்று பதினொரு வருடங்களாக சிறைவாசம் அனுபவித்த பின்னர் முன்வைத்தவேண்டுகோள் நிராகரிக்கப்பட்டு, அவன் சுட்டுக் கொல்லப்பட்ட சம்பவம் அது. தன்னை சிறையிலிருந்து விடுதலை செய்யவும்கோரவில்லை. கொலை செய்யவேண்டாம் என்றுதான் கேட்டான். 'பாலி - 9' என்று மிகப்பிரபலமான இந்தப் போதைப்பொருள் கடத்தல் வழக்கினை நான் ஆரம்பத்திலிருந்தே அவதானித்து வந்தேன்.

சட்டத்தின் ஊடான தண்டனை என்பது, சமூகத்தில் இனிமேல் குற்றம் இடம்பெறக்கூடாது என்ற அச்சத்தையும் அக்கறையும் ஏற்படுத்துவதுடன், குறிப்பிட்ட குற்றவாளியினால்சமூகத்திற்குஒருபோதும் ஆபத்து ஏற்பட்டுவிடக்கூடாது என்பதையும் உறுதி செய்யும் நடவடிக்கை. மயூரன் சுகுமாரன் விடயத்தில், அவன் குற்றத்தை உணர்ந்தான். வருந்தினான். சிறையிலேயே சித்திரக் கலைஞனாக உருவாகினான். மேம்பட்ட மனிதனாகத் தன்னை உருவாக்கினான். பதினொரு வருட சிறைவாழ்க்கை அவனை புதிய மனிதனாக அகத்திலும் புறத்திலும் மாற்றியது. இந்த நிலையில்தான் அவனை இழுத்துச் சென்று சுட்டுக் கொன்று தண்டனையை நிறைவேற்றினார்கள்.

ஈற்றில், மரண தண்டனை நிறைவேற்றப்பட்ட போது ஆஸ்திரேலிய - இந்தோனேஷிய மக்களின் மனநிலைகளையும் உற்றுப்பார்த்தேன். சட்டங்களுக்கு மேல் அரசியல் என்பது எவ்வளவு பாரதூரமான செல்வாக்குச் செலுத்தக்கூடியது என்பதையும் கண்டேன். அந்த சம்பவங்களின் ஏற்படுத்திய திரட்சியான வலிதான், 'அவனை எனக்குத் தெரியாது'.

அதுபோல, 'புலரியில் மறைந்த மஞ்சள் கடல்', இந்த நாட்டை எப்போதும் பீடித்திருக்கக்கூடிய அகதிகள் சிக்கலை பிறிதொரு கோணத்தில் அணுகிய சிறுகதை. அந்தச் சிறுகதையில் இயல்பானதொரு உணர்வோட்டம் வரவேண்டும் என்பதற்காக, மெல்போர்னில் எனது வீட்டுக்கு சற்று அருகில் உள்ள மயானத்துக்கு இரண்டு மூன்று தடவைகள் இரவில் சென்று தனியே அலைந்து திரிந்து, அதன் சூழலை அவதானித்துவிட்டெல்லாம் வந்தேன். அகதிகள் பிரச்சினையை ஒரு அகதியாக அனுபவித்தாலே ஒழிய புரிந்துகொள்ளவே முடியாது. அகதிக்குஇருக்கக்கூடிய வலி பல பரிணாமம் கொண்டது. அகதி என்ற தலைப்பின் கீழ், இன்று எத்தனையோ வித்தியாசமான வகை மாதிரிகளை எழுதிவைத்துவிடலாம். ஒரு அகதிக்கான தீர்வு கிடைக்காதபோது, அவனது இருப்பு ஒவ்வொரு வருடமும் அவனை அவன் ஆயுளில் பின்னோக்கித் தள்ளியவண்ணமுள்ளது. அவன் அனுபவிக்கும் வலிகளில் பல மடங்குகளைத் தலைக்குள் நுழைத்துவிடுகிறது. இந்த உச்ச வலியை ஒரு அகதி, இன்னொரு அகதியோடு மயானத்திலிருந்து பேசும்போது அந்த உரையாடலுக்கான பெறுமதி மேலும் அதிகரிக்கும் என்ற நோக்கில் எழுதிய கதை அது.

'ஆழியாள்' - ஆஸ்திரேலியாவுக்கான இலங்கையரின் முதலாவது புலம்பெயர்வை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட சிறுகதை. ஆஸ்திரேலியாவுக்கான இலங்கையரின் புலம்பெயர்வு 17-18 ஆம் நூற்றாண்டில் இடம்பெற்றது. மன்னாரிலிருந்து முத்துக்குளிப்பதற்காக அழைத்துவரப்பட்ட இருபது பேர்தான், ஆஸ்திரேலியாவுக்கு வந்த முதலாவது இலங்கையர்கள் என்று கூறப்படுகிறது. 'வியாழக்கிழமை தீவு' எனப்படுகின்ற குவீன்ஸ்லாந்தின் வடக்கிலுள்ள தீவுக்குக் கொண்டுவரப்பட்ட இவர்கள், 'சிலோன்' என்ற அடைமொழியோடு அழைக்கப்பட்டார்கள். ஆஸ்திரேலியக் கடலில் முத்துக்குளிப்பதற்கு இவர்கள் ஈடுபடுத்தப்பட்டார்கள். இந்த வரலாற்றை முக்கியப்படுத்தும் விதமாக எழுதப்பட்ட மிக நீண்ட சிறுகதை. ஒரு அச்சு இதழான 'நீலம்'இந்தக் கதையை இடச்சிக்கல் பாராது பிரசுரித்தமை எனக்கு மிகுந்த ஆச்சரியத்தைத் தந்தது.

முன்னர் குறிப்பிட்டதைப்போல, இந்த நாட்டில் இடம்பெற்ற வரலாற்று ரீதியான சம்பவங்கள், ஒரு புலம்பெயரிக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தக்கூடிய அபூர்வமான நிகழ்வுகள், புலம்பெயர்தலில் இருக்கக்கூடிய அரூபமான சிக்கல்கள்போன்றவற்றை எழுதுவதற்கு இலக்கியத்தின் புதிய தளங்கள் இடமளிக்கிறது. சம்பவங்களாகப் பதிவு செய்து பல விடயங்களை வரலாற்றில் கரைத்துவிடுவதிலும் பார்க்க, அரிய காலமொன்றின் மனசாட்சியை - மனப்போராட்டத்தை - மன வடுக்களை நுட்பமாகப் பதிவு செய்வதற்கு இலக்கியம் தேவைப்படுகிறது. புனைவின் சுதந்திரத்தின் வழியாக, காலத்தின் நரம்பில் ஒலிக்கும் துடிப்பினை எழுதுவதற்கு இலக்கியம் இன்றியமையாததாகிறது.

**தமிழிலக்கியம் இன்று தமிழகம், ஈழம் என்பதற்கு அப்பால் உலகப்பரப்பில் பேரனுவங்களையும் பெரும் பிராந்தியங்களையும் கொண்டியங்குகிறது. அ. முத்துலிங்கம், சேரன், ஷோபாசக்தி, கலாமோகன் தொடக்கம் நவீன், பா.அ. ஜெயகரன், தர்மு பிரசாத், அனோஜன் பாலகிருஸ்ணன், சாதனா வரை வெவ்வேறு திணைகள், வெவ்வேறு நிலங்கள், வெவ்வேறு நாடுகளில் இருந்து கொண்டு எழுதுகிறார்கள். ஆனாலும் இந்த வேறுபாடுகளையும்**



**சிறப்புகளையும் கண்டுணர்ந்து வெளிப்படுத்தும் ஆய்வு, விமர்சனம் எதுவும் குறிப்பிடக்கூடிய அளவுக்கு இல்லையே, காரணம் என்ன?**

ஈழ இலக்கியம் பற்றிய ஆரோக்கியமான சமகால உரையாடல்கள் மிகவும் மந்த நிலையில் உள்ளன. இதனை வெளிப்படையாக நாங்கள் ஒப்புக் கொள்ளவேண்டும். இலக்கியம் என்பது வருமானமில்லாத தொழில், அதில் ஈடுபடுபவர்களுக்கு பாரம்பரியமாகவே சமூக அங்கீகாரங்கள் கிடையாது போன்ற வாய்பாடுக்காரணங்களுக்கு அப்பால், இலக்கிய ரீதியிலேயே காணப்படுகின்ற பின்னடைவுகளை எடுத்து நோக்குவோம்.

ஈழத்திலும் புலம்பெயர்ந்த தேசங்களிலும் நூல் வெளியீடுகளின் எண்ணிக்கைக்கு சமாந்தரமாக அந்த நூல் குறித்த ஆய்வுகளோ - உரையாடல்களோ போதியளவு மேற்கொள்ளப்படுவதில்லை. பொதுவில் வாசிப்பு என்பதே மேலோட்டமானதாகவே காணப்படுகிறது. புத்தகங்களைப் படிப்பவர்களிடமும்கூட ஒருவித கள்ள மௌனம் நிலவுகிறது. இலக்கியம் என்ற அறிவுச் செயற்பாட்டுக்கு இது எதிரானது. முன்பு சிறுபத்திரிகைச் சூழலில் - எழுதியவர் யாரென்றே தெரியாத - படைப்பாளிகளுடனான தொடர்பற்ற - காலப்பகுதியில் நிலவிய அந்நியோன்யமும் இறுக்கமும் இன்று அருகிலே எழுத்தாளரைக் கண்டுகொள்ளும் வாய்ப்பிருந்தும் தொலைவாகிவிட்டது. வாசிப்பின் உன்னதங்களை அல்லது நீண்ட உரையாடல்களை எதிர்கொள்ளும் அறிவுசார் களம் முற்றாகக் கலைந்துவிட்டது.

ஆங்காங்கேமேற்கொள்ளப்படுகின்ற அபூர்வமான உரையாடல்களும்கூட, வாசிப்பதை அப்படியே ஒப்புவித்துவிட்டு, அதற்கு விமர்சனம் - திறனாய்வு போன்ற கலைச்சொற்கள் அணியப்படுகிறதே தவிர, வாசிப்பிலிருந்து தாங்கள் தொகுத்துக் கொண்டதைநுட்பமாக முன்வைக்கு கூர்மை இன்னும் போதவில்லை.

இதற்கு மிக முக்கிய உதாரணம், அண்மையில் வெளியான 'தனுஜா' என்ற திருநங்கையின் கதை. அது ஒரு தன்வரலாற்று நூல். இந்த நூல் வெளிவந்தவுடன், நூல் குறித்த மெய் நிகர் உரையாடல்கள் ஈழத்தமிழர் வட்டத்தில் பரவலாக இடம்பெற்றன. இந்த உரையாடல்களில் கலந்துகொண்டவர்களில் பெரும்பாலனவர்கள், தனுஜாவின் தனிப்பட்ட வாழ்வு சம்பந்தமான கேள்விகளைக் கேட்டு, அவரது வாழ்க்கையை ஆழமாகக் குடைந்து குடைந்து நூலில் இல்லாத ஏதாவது புதினத்தை, தோண்டி எடுத்துவிடலாம் என்று அங்கலாய்த்தார்களே தவிர, வாசகர்களாக யாரும் உரையாடவில்லை. இன்னும் குறிப்பாகச் சொல்லப்போனால், ஒரு தன் வரலாற்று நூலை எவ்வாறு அணுகுவது என்ற அடிப்படை பண்புநிலைகள்கூட அவர்களுக்குப் புரியவில்லை.

நீங்கள் குறிப்பிட்டதைப்போல ஷோபா, முத்துலிங்கம் போன்றவர்கள் குறித்தே, தமிழகத்தில் எழுத்தப்பட்டளவு ஈழத்தமிழர்கள் மத்தியில் ஆழமான ஆய்வுகளோ - வாசிப்பு மதிப்பீடுகளோ முன்வைக்கப்படவில்லை.

இந்த விடயத்தில் தமிழகச் சூழலை ஒப்பீடு செய்யவேண்டிய தேவையிருக்கிறது. இன்று ஜெயகாந்தனும் ஜி. நாகராஜனும் மௌனியும் ஏன் பாரதியும்கூட அங்கு தொடர்ந்து மீள் வாசிப்புச் செய்யப்படுகிறார்கள். அவர்களது எழுத்துக்கள் மீள் பதிப்புச் செய்யப்பட்டவண்ணமுள்ளன. புதிய தலைமுறையினர் வெவ்வேறு கோணங்களில் தமது வாசிப்பு அனுபவத்தை முன்வைக்கிறார்கள். ஆனால், ஈழத்தில் ஜனரஞ் சகமாக அறியப்பட்ட எழுத்தாளர்களைத்தவிர, இன்னும் எத்தனையோ பேரின் எழுத்துக்கள் காலச்சுழலில் விடுபட்டுப்போய்விட்டன. ஏன், எழுத்தாளர்களின் பெயர்களே அவ்வப்போது அவர்கள் காலமாகும்போதுதான் அறியவருகின்றன. இது எவ்வளவு பெரிய அவலம்.

ஒரு அறிவியக்கச் செயற்பாடென்பது மற்ற எல்லாத் துறைகளைப்போல தொடர்ச்சியாக நடைபெற்றுக் கொண்டிருக்கவேண்டியது. அதன் முக்கியத்துவம் உணரப்படாதவரைக்கும், இலக்கிய ஆய்வுகள்போன்ற பெரும்பணிகள் ஈழத்தமிழ் பரப்பில் இடம்பெறுவதற்கு சாத்தியமில்லை.

"பா. தெய்வீகன்" <theivigan@gmail.com>
கருணாகரன் <poompoom2007@gmail.com>

10

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

ஓவியம்: **நடேஷ்**



## 26. நெடுஞ்சுரம்

வருடத்துக்கொருமுறை வரும் வசந்தத்திற்காய்
வழிமேல் விழிவைத்துக் காத்திருப்பவளின்
தேகத்தில் தினமும்
காலையரும்பிப்
பகலெல்லாம் போதாகி
மாலை மலர்ந்து விரிந்து
யாமத்தில் வெதும்பி
வீழும் பூக்களைப்
பதினைந்து நாள் விடுப்பென்னும்
பசும்பொற் சங்கிலியால்
கோர்த்துச் சேர்த்து
மணக்கும்படி
மலர்த்திவிட முடியுமா?
இலைக்குத் தெளிக்கிற
இரு கை நீரால்
வேரடியில் ஈரம் சேர்ந்துவிடுமா?
பாலை நிலத் தாவரத்தின்
பகற் கனவில்
முப்போதும்
மிதந்துகொண்டிருப்பது
பொழியக் காத்திருக்கும்
மழை மேகங்கள்தாம்.



## 27. இதழியல்

முத்த ஆறுகள்
மூர்க்கமாகச்
சுழன்றிறங்கி
மூச்சிறைக்க
மோகக் கடலுள்
நுழைவதற்கான
முகத் துவாரமே
ஈரிதழ்கள் என்பதறியா
மட மாந்தர்
கடமைக்கெனக்
கன்னத்தில்
கணநேரம் ஒற்றியெடுப்பது
காதலுக்கு மாத்திரமல்ல
கடை திறவாக்
காமத்திற்குமே இழுக்கு.

(தொடரும்)

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல்அடங்கியும் விடுகின்றன.ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசுஇன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்தியசமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக்காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான்.இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

## 1. சரமாகோ

# பாத்திரங்கள் என்னும் எஜமானர்களும் படைப்பாளி என்னும் கற்றுக்குட்டியும்

**தமிழில்: ஸிந்துஜா**

என் வாழ்க்கையில் நான் அறிந்த மிகப் புத்திசாலித்தனமான மனிதருக்கு எழுதவோ படிக்கவோ தெரியாது. வயல்களை ஸ்பரிசிப்பதற்காக, எழுவதற்கு முயலும் தினத்தின், அதிகாலை நான்கு மணிக்கு அவருடைய படுக்கையிலிருந்து எழுந்து வயலுக்குக் கிளம்பி விடுவார். கூடவே வயலில் மேய்ச்சலில் இறங்கட்டும் என்று ஆறு பன்றிகளையும் அழைத்துச் செல்வார். அவைதான் அவருக்கும் அவரது மனைவிக்கும் உதவும் விதத்தில்குட்டிகளை ஈன்றெடுப்பவை.



போர்ச்சுக்கலின் ரிபாட்ஜோ பிரதேசத்தில் இருந்த அசின்ஹாகா கிராமத்திலே என் தாயின் பெற்றோர் வசித்தார்கள். அவர்கள்பால்குடிமறக்கும் வரை பன்றிக்குட்டிகளை வளர்த்துவிட்டு மற்றவர்களிடம் அவற்றை விற்றுவிடுவார்கள். அவர்களின் பெயர்கள் ஜெரோனிமோ மெய்னோ, ஜோசஃப் கெய்சினா. அவர்கள் இருவரும் கல்வியறிவு பெறாதவர்கள். வீட்டின் குடுவைகளுக்குள் வைக்கப்பட்டிருக்கும் நீர் பனிக்கட்டியாக உறைந்துவிடும் பனிக்காலத்தில் வெளியே உள்ள பன்றிக் கிடையிலிருந்து பலவீனமான குட்டிகளை எடுத்து வந்து அவர்களது படுக்கையில் போடுவார்கள். போர்வையிலிருந்தும் மனித உடல்களிலிருந்தும் கிடைக்கும் வெப்பத்தின் அரவணைப்பில் அவை சுருண்டு படுத்திருக்கும். சாவைத் தவிர்க்கும் வகையில்.



அவர்கள் இருவரும் எல்லோரிடத்திலும் அன்பு பாராட்டுபவர்கள்தான். ஆனால், பன்றிக் குட்டிகளைக் காப்பாற்றும்அவர்களது செயலுக்குப் பின்னிருந்தது மனிதாபிமானம் என்று தப்பர்த்தம் செய்துகொள்ள வேண்டாம். அவர்களது தின வாழ்க்கைக்கான உணவை சம்பாதித்துத் தரும் வல்லமையை அப் பன்றிக் குட்டிகள் பெற்றிருக்க வேண்டும் என்பதினால்தான்.அவர்களையொத்த மனிதர்கள் அனைவரிடமும்இத்தகைய நினைப்புதான் வாழ்க்கையை ஒட்டிச் செல்ல உதவியாக இருந்தது.

என் தாத்தாவிற்கு நான் பல தடவைகள் உதவி புரிந்திருக்கிறேன். வீட்டை ஒட்டியிருந்த தோட்டத்தைப் பலமுறைகள் கொத்திப் போட்டிருக்கிறேன்.தீமூட்டுவதற்காகக்காட்டிலிருந்து மரக்கட்டைகளைச் சுமந்து வந்திருக்கிறேன். தண்ணீர்க் குழாய்கள் மூலம் நீர் பாய்ச்சுவதற்கு ஏதுவாகப் பெரும் சக்கர உருளைகளைத் தீயில் காய்ச்சினேன். கிராமத்துப் பொதுக் கிணற்றிலிருந்து நீர் சேந்தி என் தோளில் சுமந்து வீட்டுக்குக்கொண்டு வந்தேன்.சோளக் காட்டுக் காவலாளிகளை ஏமாற்றிப் பல தடவை அதிகாலைகளில் என் தாத்தாவுடன் ரேக்குகளை எடுத்துக்கொண்டு போய் சோளத் தட்டைகளையும் கருதுகளையும் கயிறுகளில் கட்டித் திருட்டுத்தனமாக வீட்டுக்குக்கொண்டு வந்தேன்.

கோடையில் சில நாள்கள் இரவு உணவு முடிந்த பின் என் தாத்தா “ஜோஸ்,இன்றிரவு நாம் இருவரும் அத்தி மரத்தினடியில் படுத்துத் தூங்கப் போகிறோம்“ என்பார். அங்கிருந்த மூன்று மரங்களில் பெரிதாகவும் நாள்பட்டதாகவும் இருந்த மரத்தைத் தெரிவுசெய்து படுக்கப் போவோம். இரவின் அமைதியில் மரக்கிளைகள் மட்டும் அசைந்து தரும் லேசான ஒலியைக் கேட்க முடியும். அப்போது ஒரு நட்சத்திரம் எழுந்து வந்து ஒரு இலையினடியில் பதுங்கிக்கொள்வதைப் பார்த்திருக்கிறேன். என் பார்வையை வேறொரு பக்கம் திருப்பினால் வெளுத்துப் போன வானத்தில் ஓர் ஆற்றைப் போல் அந்த நிலவு நகர்ந்து போகும். பால் நிலவுப் பாதை! அது சாண்டியாகோவுக்கும் இட்டுச் செல்லும் என்று கிராமத்தில் நாங்கள் நம்பினோம். தூக்கம் வரும் வரை தாத்தா சொல்லும் கதைகள் சுவாரஸ்யமானவை; புனைவுகள், புராணங்கள், தரிசனங்கள்,வன்முறைகள்,தனித்தவொரு நிகழ்வுகள், மரணங்கள், போராட்டங்கள், மூதாதையர்களின் உபதேசங்கள், நூற்றுக்கணக்கான பொய்ச் சரடுகள் நிரம்பிய கதைகள் - இவை என்னைத் தூங்க விடாமலடிக்க வரும் வல்லமை பெற்றிருந்தன. அதே சமயம் அவை தாலாட்டும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட மாதிரி என் கண்களை முயற்சி செய்யும். என்னிடமிருந்து வரும் அரைகுறைக் கேள்விகள் நின்றதை அறிந்து நான் தூக்கத்தில் மூழ்கிவிட்டதை அவர் தெரிந்துகொள்வார்.“அடுத்து

என்ன?" என்று நான் கேட்கும் கேள்வி வராமலே தாத்தா தன் கதையை நீட்டிச் செல்வார். ஏதோ மறுநாள் அதை மறந்து விடுவோம் என்று பயந்தவர் போல. அந்த வயதில் எல்லாக் குழந்தைகளையும் போல நானும் என் தாத்தா ஜெரோனிமோவுக்குத் தெரியாத விஷயம் என்று இந்த உலகில் எதுவும் கிடையாது என்று நம்பினேன்.

அதிகாலைப் பறவைக் கீதங்கள் என்னை எழுப்பும் போது என் தாத்தா படுக்கையில் என் அருகில் இருக்க மாட்டார். அவருடைய பிராணிகளை ஒட்டிக்கொண்டு வயலுக்குப் போய் விடுவார். நானும் எழுந்த பின் போர்வையை மடித்து வைத்துவிட்டு வெறுங்காலுடன் வீட்டுக்கு வெளியிலிருந்த தோட்டத்தில் நடப்பேன். என் பதினாலு வயது வரை நான் வெறுங்காலுடன்தான் நடந்தேன். என் பாட்டி என் தாத்தா வயலுக்குச் செல்வதற்கு முன்பே செய்து வைத்திருந்த காப்பியை ஒரு பெரிய பாத்திரத்தில் ஊற்றி எனக்குக்கொடுப்பாள். சில சமயம் கூடவே ரொட்டியும். "நான் நன்றாகத் தூங்கினேனா?" என்று விசாரிப்பாள். என் கனவுகளைப் பற்றிச் சொன்னால் பாட்டி, "இது தாத்தா சொன்ன கதைகளின் விளைவாய் இருக்கும். கெட்ட கனவு என்றெல்லாம் பயப்படாதே. கனவு என்பதே வெறும் மயக்கம்தான்" என்பாள். அந்த சமயங்களில் பாட்டியும் புத்திசாலிதான் என்றாலும், அவள் தாத்தா எட்டிய உயரங்களை அடையவில்லை என்று நினைப்பேன். அந்த மனிதன், ஓர் அத்திமரத்தினடியில் பேரனை அணைத்துக்கொண்டு இந்த உலகமே அவர் கட்டுப்பாட்டுக்குள் இருப்பது போன்ற கதைகளைச் சில வார்த்தைகளில் சொல்லும் திறமை பெற்றவர் என்று நானும் அவரைப் பார்ப்பேன்.

என் தாத்தா இறந்த பிறகுதான் - அப்போது நான் வயதுக்கு வந்துவிட்டேன் - அவருக்கும் கனவுகளில் பெரும் நம்பிக்கை இருந்தது என்று உணர்ந்தேன்.

ஒருநாள் மாலையில் வாசல் கதவுப்பக்கம் உட்கார்ந்தபடி வானத்தில் தென்பட்ட நட்சத்திரங்களைப் பார்த்துவிட்டு என் பாட்டி - இப்போது தனிமையில் வாழ்ந்தாள் - "உலகம் அற்புதமானது. அதை விட்டுவிட்டு நான் மரணம் அடைய வேண்டியிருப்பது பெரும் கொடுமை" என்றாள். அவள் சாவதற்குப் பயப்படுவதாகச் சொல்லவில்லை. வாழ்நாள் முழுவதும் உழைத்தே வளர்ந்த அவளுக்குக் கண்ணுக்கெட்டாத சக்தியின் அருளும் அமைதியும் தனது வாழ்நாளின் இறுதியில் பிரியா விடை தருவது போலத் தோன்றிய தருணத்தைத்தான் சாவு பரிதாபத்துக்குரியது என்று சொன்னாள் போலும்! அவள் வாசல் கதவருகில் உட்கார்ந்து கொண்டிருந்த போதுஅம்மாதிரிக்காட்சியை இவ்வுலகில் நான் வேறெங்கும் காண முடியாது என்று எனக்குத் தோன்றியது. ஏனெனில், அவள் வளர்ந்த அந்த வீட்டில் பன்றிக் குட்டிகளைத் தன் குழந்தைகள் போல அரவணைத்துக்கொண்டு, அழகான இவ்வுலகத்தைப் பிரிய வேண்டுமே என்ற ஏக்கத்தை மனதில் இருத்திக்கொண்டு இருந்த தருணத்தை அவள் வெளிப்படுத்திக் கொண்டிருந்தாள். என் தாத்தா ஜெரோனிமோ - அந்தப் பொல்லாத கிழவனோ- சாவு தன்னை நெருங்கி வருவதை முற்றிலும் அறிந்தவரைப் போலத் தோட்டத்தில் வளர்ந்து நின்ற ஒவ்வொரு மரத்துக்கும் அருகில் போய் நின்று அவற்றை அணைத்துக் கட்டிக்கொண்டு கதறினார். ஏனென்றால், அவற்றைவிட்டு நிரந்தரமாகப் பிரிய வேண்டுமே என்கிற சோகத்தில் மூழ்கி இருந்தார்.

பல வருடங்கள் கழித்து என் தாத்தாவையும் பாட்டியையும் (அவள் சிறு வயதில் சொல்ல வொண்ணாத அழகியாகத் திகழ்ந்தாள் என்று பலர் சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறேன்) - சாதாரணர்களாகிய அவர்களை இலக்கியக் கதாபாத்திரங்களாக மாற்றிக்கொண்டிருந்தேன் என்று இறுதியில் தெரிந்தது. ஒரு வகையில் இது நான் அவர்களை என்றும் மறக்கக் கூடாது என்று செய்த முயற்சியென நினைத்தேன். அவர்களது முகங்களைத் திரும்பத் திரும்பப் பென்சிலில் வரைந்து வண்ணம் ஊட்டி நினைவில் எப்போதும் தங்கியிருக்கும்படி செய்தேன். தடுமாற்றமுடைய வரைபடத்தில் அவர்கள் என் வாழ்க்கையின் சலிப்பான பகுதிகளை நீக்குவதற்கு உதவினார்கள். கவர்ச்சியையும் உத்வேகத்தையும் எழுப்பும் பெர்பெர் வம்சத்துக்கு கிழவரை நினைத்து அந்த நினைவால் தாக்கப்பட்டு என் பெற்றோரையும் இவ்வாறு சித்தரித்தேன். 'எங்களிடமிருந்த ஒரு பழைய புகைப்படத்தில் (எடுத்து எண்பது வருஷங்களாகியிருக்கும்) என் அழகான இளமையான பெற்றோர் காமிராக்காரரை நோக்கி நின்றிருக்க, அவர்கள் முகம் சற்று சீரியஸாக இருக்கிறது. ஒரு வேளை காமிராவுக்கு முன்பு முதல் தடவையாக நின்ற போது படபடப்பு ஏற்பட்டுவிட்டது போலும்! அவர்கள் வாழ்க்கையில் இன்னொரு முறை வர வாய்ப்பில்லாமல் போய்விடும் என்றஞ்சியது போலப் பிடிக்கப்பட்ட அப்புகைப்படம்! ஏனெனில், மறுநாள் வழக்கம் போல அவர்கள் வேலைப் பளுவில் மூழ்கி விட அது மற்றுமொரு நாளாகக் கழிந்துவிடும். என் அம்மாவின் முழங்கை அருகிலிருந்த உயரமான தூணில் பதிந்திருக்க வலது கையில் ஒரு பூவை ஏந்தியிருக்கிறாள். என் தந்தையின் கை என் அம்மாவின் முதுகில் பதிந்திருக்கிறது. . அவர்களின் முகங்களை வெட்கம் சூழ்ந்திருந்ததும் தெரிகிறது. புகைப்படத்தின் பின்னணி ஏதோ ஒருமுரண்பட்ட நவீனக் கட்டிட அமைப்பை வெளிப்படுத்துகிறது.'

பிறகு இவ்வாறு முடித்தேன்: 'இதைப் பற்றிச் சொல்ல ஒரு நாள் வரும். இது என்னைத் தவிர இது வேறு யாரையும் ஈர்க்காமல் இருக்கக் கூடும். வடக்கு ஆப்பிரிக்காவிலிருந்து வந்த, பன்றி மெய்ப்பாளரான பெர்பெர் வம்சத்து என் தாத்தா, மிகவும் அழகு வாய்ந்த என் பாட்டி, சீரியஸ் முகபாவத்துடன் எழில்



ததும்ப நின்ற என் பெற்றோர், படத்திலிருந்து பூ, - வேறெந்த வம்சாவளியை நான் நாட வேண்டும்? வேறெந்த மரத்தின் மீது நான் சாய்ந்து கொண்டு இளைப்பாற?'

முப்பது வருஷங்களுக்கு முன்பு நான் இவ்வரிகளை எழுதினேன். என்னை உருவாக்கிய, எனக்கு நெருக்கமான இந்த மனிதர்களை அவர்கள் வாழ்க்கையை வெளியுலகம் அறிய வேண்டும் என்னும் ஆர்வத்தில் எழுதினேன். நான் எங்கிருந்து வந்தேன், எந்த மாதிரியான மனிதனாக நான் கொஞ்சம் கொஞ் சமாக வளர்ந்து உருவாக்கப்பட்டேன் என்பனவற்றை அறிவிக்க இதைத் தவிர நான் வேறெதுவும் செய்ய வேண்டியதில்லை என்று எனக்குத் தோன்றியதால் எழுதினேன். ஆனால், உயிரியல் எல்லாவற்றையும் தீர்மானிக்கும் வல்லமை பெற்றதல்ல. மரபணுவியலோ புதிரான பாதைகளை அடக்கிக்கொண்டு நெடும் தூரம் செல்லும் வலிமையுடையது என்பதைப் பின்னாள்களில்தான் புரிந்துகொண்டேன். என் மரபணு மரம் (இந்த வார்த்தையை நான் உபயோகிக்கத் தயங்கினாலும், அதனுடைய சாறு என்னை ஊக்குவிக்கன்றது) காலத்துடன் ஏற்பட்ட போராட்டங்களினால் அதன் பல கிளைகளை இழந்துவிட்டாலும்,அதன் வேர்கள் நிலத்தடியை ஆழப் பிளந்து சென்று ஒருவரை அதைப் பற்றிய புரிதலுடன் இயங்க வைக்கின்றது. அத்தகைய ஆழ்ந்த புரிதல் உடையவர் நறுமணமிக்க பழத்தின் மேற்புறம் பறவை இனங்களுக்கான தங்குமிடம்போலும் தன்னை வெளிப்படுத்திக்கொள்வதைக் காண்கிறார். என் பெற்றோரையும் அவர்களின் பெற்றோரையும் இலக்கிய வர்ணைகளால் தீட்டும் போது அவர்களை சதையும் ரத்தமும் கொண்ட சாதாரண மனிதர்களிடமிருந்து மாற்றுகிறேன், என் வாழ்க்கையைக் கட்டமைத்த கட்டிடக்காரர்கள் என. இந்த உருவாக்கும் பணியில் நான் செல்லும் பாதையை நான் கவனிப்பதில்லை. அப்பாதைகள் கொண்டு சேர்க்கும் இடத்தில் நான் காணும் பாத்திரங்கள் தரும் செல்வங்கள்,போதுமானவையோ அளவற்றவையோ, லாபமோ நஷ்டமோ, நல்லதற்கோகெட்டதற்கோ, நான் என்கிற என்னை உருவாக்கிவிடுகின்றன. அவர்களை உருவாக்கும் நான் கடைசியில் உணருவது என்னையே உருவாக்கிக்கொண்டு விட்டதைத்தான். ஒரு விதத்தில் சொல்லப் போனால் ஒவ்வொரு எழுத்தும் வரியும் வாக்கியமும் பக்கங்களும் புத்தகங்களாக வெளிப்படுகையில் நான் கையகலப்படுத்தியது என்னையேதான். அவர்கள் இல்லாவிட்டால் நான் இல்லை என்பதுதான் உண்மை. அவர்கள் இல்லாமலிருந்திருந்தால் என் எழுத்து பழுதுபட்ட ஓவியம் என, காப்பாற்றப்படாத வாக்குறுதியென, நிலைத்துவிட்டது என்று நினைத்ததுநிலைக்காமல்தடுமாறுகிறது எனத் தோற்றம் கொண்டிருக்கக் கூடும்.

இன்று அவர்கள் என் வாழ்வின் எஜமானர்கள். கடும் உழைப்பு தரும் வாழ்க்கையின் செல்வத்தைக் கற்பித்தவர்கள். நான் டஜன் கணக்கில் உருவாக்கிய பாத்திரங்கள் என் கண் முன் நடந்து செல்கிறார்கள். பேப்பரில் மசியில் உருவாகிய அவர்கள் என்னைச் சுற்றிப் படர்ந்திருக்கிறார்கள். நான் சற்றுக்கர்வத்துடன் படைப்பாளி என்று அவர்களின் கட்டளைகளுக்கு இணங்க வைத்தேன். ஆடும் பொம்மைகள் என நான் ஆட்டும் கயிற்றுக்கு ஏற்பயிருந்து அவர்கள் மீது நான் செலுத்தும் ஆக்கிரமிப்பையும் இழு விசையையும் ஏற்று ஆடுபவர்களாகி விடுகிறார்கள். இவர்களில் முதலானவனும் முக்கியமானவனுமாகிய ஒரு சாதாரண ஓவியன் - அவனை நாம் 'ஹெச்' என்று அழைப்போம் - ஒரு கதையின் இலக்கியப் பாத்திரமாக வருகிறான். அவனது துவக்கம் அவனாலும் ஓரளவு என்னாலும் இயக்கப்படுவது. 'மேனுவல் ஆஃப் பெயின்டிங் அன்ட் காலியோகிராபி' என்னும் நாவலில் வருகிறான். எந்த விதக் கோபமோ சலிப்போ இன்றி என் எல்லைகளை வரம்புகளை அவன்நேர்மையுடன்எனக்கு உணர்த்துகிறான்.

என்னுடைய சிறிய நிலத்தைப் பதப்படுத்தி விவசாயம் செய்வதைத் தவிர வேறெதிலும் நாட்டம் காண்பிக்காத நான், அந்நிலத்தின் ஆழத்தை அதன் வேர்களைக் காண முயற்சித்தால் எனக்கும் ஏன் உலகத்துக்கும் அது தெரிவிக்கும் சாதனைகள் எப்பேற்பட்டதாக இருக்கும்? அதன் பயன்களை

மதிப்பிடும் திறன் என் வசத்தில் இல்லை என்பதும் உண்மை.இத்தகைய சூழலைத்திரும்பிப் பார்க்கையில் அவனது உணர்வுகளும் எச்சரிக்கைகளும் என் வாழ்வை நிர்ணயித்த வழிகளாயின என்று உணருகிறேன்.

அலன்டேஜோவிலிருந்து வந்த ஆண்களும் பெண்களும் என் தாத்தா ஜெரோனிமோ மெய்னோ, என் பாட்டி ஜோசஃப் கெய்சினா போல உலகம் ஒதுக்கியிருந்த தாழ்த்தப்பட்டவர்களெனத் தங்கள் உழைப்பைத் தர முன்வந்து நின்றார்கள். தங்களது வலிமையான தோள்கள் கூலியைப் பெற்றுத் தரும் என்று நம்பினார்கள். அவர்களுக்குக் கிடைத்தது என்னவோ தகுதிக்கும்கீழான கூலிதான்.நாகரிகம்மிக்க மனிதர்கள் என்று நம்பிய பணக்கார, வசதிகள் மிக்க உயர்மட்ட மனிதர்கள் எம்மவர்களின் வாழ்க்கையை ஒடித்துப் போட்டார்கள். அரசுடன் சமரசம் செய்துகொண்டு எண்ணற்ற நன்மைகளை அடைந்த தேவாலயக்காரர்கள் சாதாரண ஏழை ஜனங்களை ஏமாற்றுவதைத் தொழிலாகக்கொண்டார்கள். நிலச்சுவான்தார்கள், அவர்கள் பங்குக்கு ஏழைகளை ஒடுக்குவதே தமக்கு விதிக்கப்பட்ட விதி என்பதுபோல நடமாடினார்கள். பொய் நிரம்பிய நீதி பரிபாலனம், நிராதரவான உழைக்கும் மக்களை, அப்பாவிகளை, குடியானவர்களைத் தண்டிப்பதில் குறியாயிருந்தது. மூன்று தலைமுறை குடியானவக் குடும்பங்கள், 1974 ஏப்ரல் புரட்சியின் மூலம் சர்வாதிகார ஆட்சி ஒழிக்கப்படும் வரை அடைந்த இன்னல்கள்... அந்த மனிதர்கள் 'ரிஸன் ஃ பிரம் தி கிரவுண்டு' நாவலில் உலவுகிறார்கள்.

இம்மாதிரி மண்ணிலிருந்து எழுந்து நடமாடிய மனிதர்கள் மூலமும் பின்னர் அவர்களாகி விட்ட கதாபாத்திரங்கள் மூலமும் பொறுமை காப்பது எப்படி, காலத்தின் மீது நம்பிக்கை வைப்பது எப்படி என்பதைக் கற்றுக்கொண்டேன். காலமே நம்மை உருவாக்கிப் பின்னர் அழித்து மறுபடியும் உருவாக்கி மறுபடியும் அழிக்கும் விநோதத்தை அறிந்தேன். தமது அனுபவத்தில் விளைந்த கஷ்டங்கள் இந்தப் பெண்களிடமும் ஆண்களிடமும் வாழ்க்கையின் மீது இரக்கமற்ற வெறுப்பு நிறைந்த மனோநிலையை உருவாக்கி விட்டன என்பதுதான் உண்மை. இப்போது இருபது வருடங்களுக்குப் பின்னும் இவ்வனுபவங்கள் கற்றுத் தந்தவை என் மனதில் நிலைத்து நிற்கின்றன. தினமும் நினைவில் எழுந்து அவை எனக்கு உணர்த்துவது: அலன்டேஜோவின் மிகப்பரந்த நிலங்களிலிருந்து நான் பெற்ற மரியாதை என் வாழ்வில் முக்கியமானது. ஒவ்வொரு நாளும் அந்த அனுபவங்கள் என்னைக் கட்டிப்போட்டுக் கட்டளை இடுகின்றது. வாழ்வில் மதிப்பைப் பெற்றுத் தரும் அனுபவங்கள் போற்றுதலுக்குரியவை.

பதினாறாம் நூற்றாண்டில் அந்தப் போர்த்துக்கீசியரிடமிருந்து - ரிமாஸ் பாடலையும் எங்கள் சமூகத்தின் மகிமைகளையும் சமூகம் எதிர்கொண்ட கடற் சேதங்களைப் பற்றியும் அரசியல் நிபுணத்துவத்தில் சிறந்து விளங்கிய ஒப்பற்ற இலக்கியவாதியான பெர்னான்டெ பெசோவாவிடம்இருந்து - நான் பெற்ற பாடங்கள் எவ்வளவு முக்கியமானவை! கவி லூயி வாஸ் த கேமியோஸிடம்இருந்து அவரது எளிமையைக் கற்றுக்கொண்டது எந்தவிதக் கல்வியாலும் எனக்குத் தர முடியாதது. தன் படைப்புகளை எளிமையுடன் எடுத்துக்கொண்டு, ஒவ்வொரு வீட்டுக் கதவையும் தட்டி, தனது படைப்புகளைப் பிரசுரம் பெற உதவி கேட்டு நின்ற போது, அவற்றின் அருமை தெரியாத மூடர்களால் நிராகரிக்கப்பட்டார். கவிகளை நிராகரித்து அவர்களைக் கேலி செய்து சந்தோஷப்பட்டுக்கொண்ட முட்டாள்களாலும் கிறுக்கர்களினாலும் இவ்வுலகு நிரம்பிக் கிடந்தது. அரசனும் அவன் பரிவாரங்களும் கூட இத்தகைய மோசமான நடத்தைகளில் ஈடுபட்டவர்களாகத்தான் இருந்தார்கள். எந்தப் படைப்பாளியும் கவி லூயி வாஸ் த கேமியோவாகத்தான் அவனது வாழ்க்கையில் இருக்க வேண்டியிருக்கிறது. 'சோபலோஸ் ரியாஸ்' போன்ற ஈடு இணையில்லாத கவிதையை எழுதியிருக்காவிட்டாலும் கூட.

பிரபுக்கள், அரசவையினர், புனித விசாரணைக் கட்டுப்பாட்டாளர்கள், நேற்றைய காதல் இதிகாச நாயகர்கள், நாயகிகள், விரைவில் கிழவர்களாகி விடுபவர்கள்என்னும் கூட்டத்துக்கு இடையே எழுதும் போது வலி-எழுதிய பின் பெருமிதம் என்று கிளர்ந்தெழுந்த ஒருவன், பணக்காரனாவதற்காக இந்தியாவுக்கு கப்பல் ஏறிச் சென்றவர்களுக்கு மத்தியில் இந்தியாவிலிருந்து ஏழையாகத்திரும்பியவன், ஒரு கண் பொட்டையாகி விட வெட்டுப்பட்ட ஆன்மாவுடன் திரிந்தவன், இன்னொரு முறை அரச மகளிரைத் திரும்பிப் பார்க்கச் செய்யும் வல்லமையைப் பெற்று இழந்தவன், இவனைத்தான் 'வாட் ஷல் ஐ டூ வித் திஸ் புக்?'என்ற நாடகத்தில் மேடையேற்றினேன். அந்த நாடகங்ளை பிலிமுண்டா என்று அழைக்கிறார்கள். நாடகத்தின் முடிவுஇன்னொருகேள்வியைஎழுப்பியது. மிகவும் முக்கியமான, என்றும் விடை கிடைக்காத கேள்வி அது: "இந்தப் புத்தகத்தை வைத்துக்கொண்டு நீ என்ன செய்வாய்?'மிகுந்த பணிவுடன் உலகின் தலைசிறந்த அந்தப் புத்தகத்தை (தன் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு) சென்ற இடமெல்லாம் மறுதளிப்பை எதிர்கொண்ட பேரறிவாளன், பணிவுடன் பிடிவாதத்தையும் கொண்டு அறிய விரும்பியதுஎல்லாம்,"இன்றுஎழுதப்படும்படைப்புகள் நாளை என்ன நோக்கத்தைச் சாதிக்க வல்லவை? அவை காலத்தை வென்று நிற்கக் கூடியவையா?"என்ற கேள்விகளுக்கான பதில்களைதான். நாம் பதில்கள் என்று நம்பிக்கொண்டு கொடுப்பவை எல்லாம் நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வதற்காக நாமே தயாரித்தவை! அவனை ஏமாற்ற விரும்பியவர்களை அவன் ஏமாற்ற விரும்பவில்லை.



இங்கே போரில் கையை இழந்த ஒரு வீரன் வருகிறான். ஒரு பெண், மனிதரின் தோலுக்குப் பின்னால் மறைந்திருக்கும் மர்மமான சக்தி என்ன என்பதை அறிவதற்கென்று அவதரித்தவள். அவனுடைய பெயர் பல்தசார் மேடஸ். செல்லப் பெயர் செவன் சன்ஸ். அவளைப் பெலிமுண்டா என்று அழைத்தார்கள். அவளுடைய செல்லப் பெயர் செவன் மூன்ஸ். ஏனெனில், எங்கு சூரியன் இருக்கிறானோ அங்கு நிலவும் இருக்க வேண்டும். இவ்விருவரின் காதலினால்தான் பூமி ஓர் வாழும் கிரகமாக இருக்கிறது. பார்த்தலோமு என்னும் ஒரு கத்தோலிக்கப் பாதிரி கண்டுபிடித்த ஓர் இயந்திரம் வேறு எந்த ஒரு எரிபொருளின் உதவியும் இல்லாமல் மனித ஆற்றலை வைத்துக்கொண்டு வானத்தில் பறக்கும் வல்லமை பெற்றிருந்தது. ஆனால், அந்த ஆற்றலாலும் சாதாரண அன்பு அல்லது சாதாரண மரியாதை என்னும் சூரிய சந்திரர்களை அடைய முடியாது அல்லது அவர்களைத் தொட விரும்பாதுஇருந்தது. பதினெட்டாம்நூற்றாண்டைச் சேர்ந்த இந்த மூன்று 'முட்டாள்களும்' - மூட நம்பிக்கைகள் நிலவிய நாட்டில், புனித விசாரணை என்ற பெயரில் அட்டூழியங்கள் வளைய வந்த நாட்டில், தற்புகழ்ச்சியில் ஒரு கன்னி மாடம் ஓர் அரண்மனை, ஒரு பெரும் தேவாலயம் என்று கட்டி அரசு கோலோச்சி வெளியுலகத்தைப் பிரமிப்பில் ஆழ்த்த முயன்று கொண்டிருந்த தருணத்தில் - போர்த்துக்கீசிய நாட்டைக் கண்டுபிடித்தார்கள். அதே வெளியுலகம் பெலிண்டாவின் கண்களை ஒத்த பார்வையில் மறைந்து கிடந்த போர்த்துக்கீசிய நாட்டைப் பார்த்தது. இச்சந்தர்ப்பத்தில்தான் ஆண்டு முழுவதும் பெருங் கற்களைத் தங்களது அழுக்கான கைகளால் எடுத்துப் பிரமாண்டமான கான்வென்ட் சுவர்களை, அரசாங்க மாளிகை அறைகளை, தூண்களை, பெரும் மணிக்கூண்டுகளை, குவி மாடங்களைக் கட்டிய ஆயிரக்கணக்கான மனிதர்கள் வலம் வந்தார்கள். நம் காதில் விழும் ஒலிகள் டொமினிக்கோ ஸ்கார்லட்டியின் இசைக் கருவியிலிருந்து பிரவகிப்பவை. அவை அவன் சந்தோஷத்தை அல்லது அழுகையைப் பிரதிபலித்தனவா என்று அவனே அறியவில்லை.

இதுதான் 'பல்தாசரும் பெலிமுண்டாவும்' என்ற கதையாக வந்தது. இந்தப் புத்தகத்தில் வரும் முதிரா இளம் எழுத்தாளன் தனது தாத்தா, பாட்டி கூறிய கதைகளைக் கவனமுடன் இழைத்த கவிதை வரியில் இவ்வாறு கூறினான்: 'பெண்களின் பேச்சைத் தவிர கனவுகள்தான் இந்த உலகத்தைப் பேரண்டத்தில் நிர்வகித்தன. கனவுகளே நிலவுகளை வைத்து பேரண்டத்தை அலங்கரித்தன. அதனால்தான் வானம் ஆண்களின் தலைகளில் பொலிவை ஏற்படுத்தியது; வானம் என்பது மனிதர்களின் தலை என்பது இல்லாத வரை.' அப்படியே இருக்கட்டும்.

லிஸ்பனிலிருந்த பள்ளியில் தொழிற் பயிற்சி பெறச் சென்ற அந்த இளைஞன்முன்பே பள்ளிப் பாடப் புத்தகங்களிலிருந்து கவிதைகளையும் கற்றிருந்தான். இந்தத் தொழிற் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்து மெக்கானிக் ஆக வேண்டுமென்று அவன் சென்றான். பொது நூலகங்களுக்குச் சென்ற போது படிப்பதற்குப் புத்தகங்களும் சந்தித்து உரையாட அறிஞர்களும் கிடைத்தனர். எந்தவித வழிகாட்டலும் இல்லாமல், அறிவுரைகள் எதையும் எவரிடமிருந்தும் பெறாமல் கடற்பயணத்தில் தானாகவே இடங்களைத் தேடிக் கண்டுபிடிக்கும் மாலுமியைப் போலச் செயல்பட்டான். அந்தத் தொழிற் பயிற்சிக் கூடத்தின் நூலகத்தில்தான், 'தி இயர் ஆஃப் தி டெத் ஆஃப் ரிக்கார்டோ ரெய்ஸ்' நாவலை எழுத ஆரம்பித்தான். ஒரு நாள் இந்த இளம் மெக்கானிக் (அப்போது அவனுக்கு வயது பதினேழு) நூலகத்தில் 'அதீனா' என்ற பத்திரிகையைப் பார்த்தான். அதே பெயரில் கவிதைகள் அந்த இதழில் வெளி வந்திருந்தன. போர்த்துகீசிய இலக்கிய சரித்திரம் பற்றிப் போதிய விவரம் அறியாத அவன் அக்கவிதையை எழுதியவர் ரிக்கார்டோ ரெய்ஸ் என்று அச்சிடப்பட்ட பெயரை நம்பினான். அவர் புனைபெயரில் எழுதியிருந்த ஏராளமான கவிதைகளைப் படித்தான். ஆனால், பின்னாளில்தான் அவர் பெர்னாண்டோ நெகிரா பெஸோவ் என்ற கவிஞர் எனத் தெரிந்துகொண்டான். கற்பனைப் பெயர்களில் அவர் தன் கவிதைகளை வெளியிட்டார். அவர் தன் கவிதைகளை heteronyms

என்று அழைத்தார். அந்தச் சமயத்தில் இந்த வார்த்தை அகராதிகளில் இருக்கவில்லை. அதன் அர்த்தம் என்ன என்று தெரிந்துகொள்ள அவன் மன்றாடினாலும் கிடைக்கவில்லை. ரிக்கார்டோ ரெய்ஸின் பல கவிதைகளை அவன் மனப்பாடம் செய்து வைத்திருந்தான். (மகத்தானவனாக இருக்க வேண்டுமானால் முதலில் அவனாக மாறு. சின்னஞ் சிறு செய்கைகளிலும் உன் ஈடுபாடு முழுக்க முழுக்க இருக்க வேண்டும்.) அவன் இளைஞனாகவும் ஓரளவு அறியாமையின் பிடியில் இருந்தவனாகவும் நடமாடினாலும் அவனுக்கு அவருடைய சில கருத்துக்கள் பிடிக்கவில்லை. "உலகைக் கண்டு உவகையுறும் ஒருவன் மிகுந்த புத்திசாலி" என்று அவர் ஒரு முறை கூறியதைக் கேட்டு அவனுக்கு, உயர்ந்த சிந்தனைகளைத் தங்கி வரும் அவரால் கொஞ்சம் கூடக் கூசாமல் எப்படி ஒரு சாதாரணக் கருத்தைக் கூற முடியும் என்று எரிச்சல் ஏற்பட்டது. ஆனால், பின்னாளில் அவனது தலைமுடிகள் வெள்ளிக் கம்பிகளாக மாறிய காலத்தில், அவனது ஞானமும் சற்று விரிவடைந்த பொழுதில், அனுபவங்கள் தந்த பாடங்களில் கற்றுத் தெரிந்தவனாக விளங்கிய போது இந்தப் பயிற்சியாளன் தனது நாவலில் இக்கவியைப் பற்றிப் பின்வருமாறு எழுதினான்: 'இங்கே உலகின் தரிசனம் தரும் காட்சியைப் பார்க்கலாம். எனது கவிஞனின் தூய கைப்புத்தன்மையை; நிமிர்ந்து நிற்கும் ஐயுறவு வாதத்தை! காண்பதும் கண்டு மகிழ்வதும் உங்கள் சௌகரியத்தைப் பொறுத்தது!'

'ரிக்கார்டோ ரெய்ஸ் மறைந்த வருடம்' நாவல் துக்ககரமான வார்த்தைகளுடன் நிறைவு பெற்றது. 'இங்கே கடல் முடிந்து நிலம் எழுகிறது.' ஆகவே, போர்ச்சுக்கல்லில் புதிய கண்டுபிடிப்புகள் எதுவும் நிகழாது. நினைத்துக்கூடப் பார்க்க முடியாத ஒரு நீண்ட எதிர்காலத்தில் எதுவும் நடக்கப்போவதில்லை. வழக்கமான போர்துக்கீஸிய இசையான ஃபோடோ, துக்கத்தைக் கூட்டும் கவிதை வரிகள், மன்றாடும் வாழ்க்கை என்று காலம் செல்லும். அந்தப் பயிற்சியாளன் கப்பல்கள் கரையை விட்டு விலகிக் கடல்களுக்குள் செல்வதைப் பார்த்து நிலம் கடலாக மாறுவதாக எண்ணிப் பார்த்தான். ஐரோப்பா, போர்ச்சுக்கல்லை அலட்சியம் செய்யும் விதத்தைப் பார்த்துக் குமுறி எழுந்த சமுதாயத்தை 'தி ஸ்டோன் ராஃப்ட்' என்னும் நாவலில் விவரித்தான். ஐரோப்பியக் கண்டத்திலிருந்து ஐபீரிய தீபகற்பம் விலக்கப்பட்டு பெருந் தீவாக மாறி, படகுகளற்று, சுக்கானாற்று, தெற்கை நோக்கிச் செல்லும் பெருங் கற்கள் நிறைந்த நிலமாகமாறி நகரங்களையும் கிராமங்களையும் காடுகளையும் தொழிற்சாலைகளையும் மனிதர்களையும் மிருகங்களையும் தன்னுள் அடக்கிக்கொண்டு ஓர் புதிய கனவுலகுக்கு இட்டுச் சென்றது. அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் பிடியிலிருந்து விடுதலை பெறும் முகமாக அட்லான்டிக் மகா சமுத்திரத்திலிருந்து மற்றொரு பகுதிக்குச் செல்லும் முயற்சியாக - (இதுவரைதான் என் கற்பனை சென்றது.) கற்பனை செய்து எழுதினேன். இம் மாபெரும் கனவை ஐரோப்பா, தன்னை ஆண்டு கொண்டிருந்த அடக்குமுறையாளர்களிடமிருந்து விடுபட்டு விடுதலை அடைவதைப் பரிவுடனும் மனிதாபிமானத்துடனும் நோக்க வேண்டும் என்பதே என் தணியாத தாகமாக இருந்தது. இந்த மாற்றம் பெற்று ஐரோப்பா தென்பகுதியாக நிலை நிறுத்தப்படுவது சமன் பெற்ற உலகை உருவாக்கும் என்று நம்பினேன். அறம் சார்ந்த இடமாக ஐரோப்பா விளங்க இது உதவும். இரண்டு பெண்களும் மூன்று ஆண்களும் ஒரு நாயும் பாத்திரங்களாக இந்த நாவலில் உலவி தீபகற்பம், கடலைச் சேர்ந்ததையும் பயணத்தில் இடம் பெறுகிறார்கள். மாற்றம் பெறும் இவ்வுலகில் அவர்களும் தம்மைப் புதியவர்களாக உணருகிறார்கள். (நாயைப் பற்றி பேச வேண்டிய

தில்லை; அது மற்ற நாய்களைப் போல அல்ல) இது அவர்களுக்குப் போதும்.

பயிற்சியாள இளைஞனுக்குத் தான் வேறொரு சந்தர்ப்பத்தில் மெய்ப்புத் திருத்துபவனாக வேலை பார்த்தது நினைவுக்கு வருகிறது. எதிர்காலத்தை மாற்றுவதாக எழுதப்பட்ட, 'தி ஸ்டோன் ராஃப்ட்'டை அவன் செய்ததால், இப்போது பழம் சரித்திரத்தை மாற்றும் உத்தேசத்துடன், 'ஹிஸ்டரி ஆஃப் ஸீஜ் ஆஃப் லிஸ்பன்' என்னும் நாவலைக் கையில் எடுக்கிறான். 'சரித்திரம்' அப்படியொன்றும் ஆச்சரியங்களைத் தெளிக்கும் நிகழ்வுகளைக்கொண்டதல்ல என்று நிராசையுடன் நினைக்கும் அவன், சரித்திரம் கூறும் உண்மைகளைப் பொய்யென்று உரைக்கும் செயலைச் செய்ய விழைகிறான். ரைமென்டோ சில்வா என்னும் அந்த மெய்ப்புத் திருத்தும் ஆசாமி சாதாரண வெகு ஜனங்களில் ஒருவன். ஆனால், அவன் 'எல்லாவற்றிலும், புலப்படும் பொருள்களை, விஷயங்களைப் போல் புலப்படாத பொருள்களும் விஷயங்களும் உள்ளன; அவற்றை நாம் சந்திக்காத வரை அவற்றைப் பற்றி நாம் அறிவதில்லை' என்னும் மாற்றுக் கருத்துடன் இயங்குகிறான். அவனது இந்த நிலைமை மக்கள் பெருங்கூட்டம் சிந்தனை எதுவுமற்று கண்களை மூடிக்கொண்டு இயங்குவதற்கு எதிரான நிலையில் இயங்குகிறது.

மேற்சொன்ன மெய்ப்புத் திருத்துபவன் சரித்திரவியலாளரிடம், 'மெய்ப்புத் திருத்துபவர் இலக்கியத்தின் மீதும் வாழ்வின் மீதும் மிகுந்த பிடிப்புடையவர்கள். என் புத்தகம் சரித்திரம் பற்றியது. எனக்கு மற்ற முரண்களைப் பற்றி பேச விருப்பமில்லை. என்னுடைய பணிவான நோக்கில் இலக்கியமில்லாத எதுவும் வாழ்க்கையே. சரித்திரம் கூட. அதுவும் சரித்திரம் என்பது எப்போதும் எதிர்ப்பைத் தராதது. ஓவியமும் இசையும் கூட இப்படித்தான். இசை பிறந்ததிலிருந்து வந்து கொண்டும் போய்க்கொண்டும் இருக்கையில் வார்த்தை வெளியே வந்து விழுகிறது. இறுதியில் பொறாமையினால் மண்டியிட்டு விடுகிறது. ஓவியம், அது சரி, என்பது அதனுடைய



தூரிகைகளினால்இயற்றப்படும்இலக்கியம்.'உன்னிடம் நாய் இல்லாவிட்டால் வேட்டையாடுவதற்குப் பூனையைக் கூட்டிக்கொண்டு போ' என்னும் பழமொழி உங்களுக்குத் தெரியும். அதாவது எழுதத் தெரியாத ஒருவன் ஒரு குழந்தையைப் போல. ஓவியம் மூலம் தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறான். எழுத்துக்கு முன்பே ஓவியம் பிறந்துவிட்டது என்பது உங்களுக்குத் தெரிந்ததுதானே?. இலக்கியம் அது பிறப்பதற்கு முன்பே தோன்றிவிட்டது. ஆமாம் சார், மனிதன் இவ்வுலகில் தோன்றுவதற்கு முன்பே அவன் உலகில் இருந்தான் என்பதைப் போல! தொழில் எதுவும் செய்யத் தெரியாத நீங்கள் ஒரு தத்துவ ஞானியாகவோ சரித்திரவியலாளனாகவோ ஆவதற்கான குணாதிசயங்கள் உங்களுடன் நிரம்பிக் கிடக்கிறது என்று நான் நம்புகிறேன். அதற்கான விருப்பமும் மனப்பாங்கும் ஒருவரிடம் இருந்தால் போதும். எனக்கான ஜீன்களுடன் இவ்வுலகுக்கு வந்துவிட்டேன் என்றாலும் ஒப்பனைகள் எதுவும் இல்லாதவனாகத் தோன்றினேன். எனக்குப் போதிய பயிற்சி எதுவும் இல்லை. பயிற்சி பெறாத சாதாரணன் என்ன சாதிக்க முடியும் என்று நினைக்கிறீர்கள்? பிறந்து வளர்ந்த சூழ்நிலையில் போதுமான கல்வி கிடைக்கவில்லை. ஆரம்பப் பள்ளி வரைதான் படிப்பு. என் சொந்த முயற்சியால் கற்றுக்கொண்டதுதான் மூலதனம். முன்பு தன்னியக்கச் செயல்திறன் கொண்டவனை சமூகம் மதித்தது. இப்போது அப்படியில்லை. சுயமாகக் கற்றவரை சமூகம் மதித்துப் பார்ப்பதில்லை. எள்ளலுடன் அது நோக்குகிறது. வெகுஜன மதிப்பில் இயங்கும் கவிகள்,கதாசிரியர்கள் வெகுவாக மதிக்கப்படுகிறார்கள். என்னைப் பொறுத்தவரை இலக்கியம் படைப்பதில் எனக்கு அவ்வளவாகத் திறமை இல்லை என்று ஒப்புக்கொள்கிறேன். ஒரு தத்துவ ஞானியாக, புன்சிரிப்பு ஏற்படுத்துபவனாக இருக்க முடிகிறது, சரித்திரம் போன்ற கடுமை நிறைந்த விஞ்ஞானத்தின் மேல் இப்படிப்பட்டவனுக்கு எவ்வாறு ஈடுபாடு ஏற்பட்டது என்று வியக்கிறேன். என்ன ஒரு முரண்! சரித்திரம் அப்பெயரில்லாது உலவும் போது அதற்கு வாழ்க்கையுடன் சம்பந்தமிருந்தது. நீங்கள் சரித்திரம் வாழ்வுடன் சம்பந்தப்பட்டது என்று இப்போது நம்புகிறீர்களா? நடப்பு வாழ்க்கையை சரித்திரம் உள்ளடக்கியது என்பதுதான் என் நம்பிக்கை. அதில் சந்தேகம் எதுவுமில்லை' என்றான் பெருமூச்சு விட்டபடி.

பயிற்சியாளன், சில்வாவிடமிருந்து சந்தேகம் பற்றிய பாடங்களைக் கற்றுக்கொண்டான். அதன் விளைவுதான் இவ்வளவு பேச்சு. சந்தேகம் பற்றிய பாடங்களைக் கற்ற பயிற்சியாளன் 'இயேசுவின் நற்செய்தி'யை எழுத ஆரம்பித்தான். தலைப்பு ஒருவித மாயத் தோற்றத்தைத் தருவதுதான். புதிய நாவல் எழுதுவதற்கான மூலக்கருத்துக்குஇதுஉதவியதாஎன்று கேட்டுக்கொண்டான். இம்முறை எதிர்வினையாற்றும் கருத்துக்களைப் 'புதிய ஏற்பாட்டின்' பக்கங்களில் காணுவதற்குப் பதிலாக அவற்றின் தளங்களைப் பரிசீலிக்கும் முயற்சியாக இருக்க வேண்டும் என்னும் குறிக்கோளுடன் செயல்பட்டான். ஓர் ஓவியம் மென்மையாகவும் திட்டவட்டமாகவும் தன் கோடுகளை, சீர்முனைகளை, நிழல்களைப் பிரதிபலிப்பது போல. அப்படித்தான் சுவிசேஷ பாத்திரங்கள் தன்னைச் சுற்றி இறைந்து கிடைக்க முதல் முறையாக ஒன்றுமறியா அப்பாவிகளைக்கொன்று குவித்ததைப் படித்தான். ஏற்கனவே எண்ணற்றவர்கள் உயிர்த் தியாகம் புரிந்திருந்த மதத்தில் இத்தகைய கொடூரச் செயலை முப்பது வருஷங்களாக மதத்தின் ஸ்தாபகர் கண்டித்து ஒரு வார்த்தை பேசாது இருந்துவிட்டுப் பிறகு பேசியது ஏன் என்று அவனுக்குப் புரியவில்லை. செல்வாக்கு மிக்க அவர் பெத்லேகக் குழந்தைகளைக் காப்பாற்ற ஏன் முயற்சி எதுவும் எடுக்கவில்லையென்றும் அவனுக்குள் கேள்வி எழுந்தது. குறைந்தபட்சப் பொறுப்புணர்ச்சி, பச்சாதாபம் அல்லது குற்ற உணர்வு, ஏன் அறியும் ஆர்வம் கூட எகிப்திலிருந்து குடும்பத்துடன் திரும்பி வந்த ஜோசப்புக்கு ஏற்படவில்லை என்பதும் அவனுக்குப் புரிபடாமலிருந்து. யேசுவைக் காப்பாற்றுவதற்காகச் சின்னஞ் சிறு குழந்தைகள் சாக வேண்டும் என்று யாராலும் வாதம் செய்ய

முடியாது என்று அவன் நம்பினான்.

மனிதர்களின் பாவங்களை நீக்கவென்று தேவகுமாரனைக் கடவுள் அனுப்பியிருக்க, ஹெராடின் சிப்பாயினால் இரண்டு வயதுக் குழந்தையின் தலை துண்டிக்கப்படுவது, மனிதமோ தெய்வீகமோ நடத்திச் செல்லும் பொதுப்புத்தியைச் சமாதானப்படுத்தவில்லை. 'இயேசுவின் நற்செய்தி'யை எழுதிய பயிற்சியாளன் மிகுந்த மரியாதையுடன் தனது படைப்பில் ஜோசப் தன் குற்றத்தை உணர்ந்து தண்டனையை ஏற்றுக்கொள்கிறார் என்று தெரிவிக்கிறான். எந்தவித எதிர்ப்பும் காண்பிக்காது மரணத்தை ஏற்றுக்கொள்கிறார். அதுதான் அவரது செயலுக்கான தண்டனை; இனி இந்த உலகத்தில் செய்ய வேறு எதுவும் அவருக்கு இல்லை என்னும் உறுதியுடன் தண்டனையை ஏற்கிறார். பயிற்சியாளன் கடவுளுக்குக்கொடி பிடிக்காமல், மாறாக, சில தனிமனிதர்கள் அதிகாரத்தை எதிர்த்து,ஆனால், ஜெயிக்க முடியாமல் போய் விடுவதைக் காட்டுகிறான். தந்தை உலகின் பல்வேறு சாலைகளில் நடக்கும் போது அணிந்திருந்த காலணிகளைப் பெற்றுக்கொண்டது போலத் தந்தையினுடைய துக்கத்தையும் பொறுப்பின்றி நடந்துகொண்ட அவமானத்தையும் சுவீகரித்துக்கொள்ள வேண்டியிருந்தது. அவரை அனுப்பிய கடவுளிடம் மலையுச்சியிலிருந்து, 'என்ன செய்தோம் என்று அறியாமல் செய்த மனிதனை மன்னித்து விடுங்கள்' என்று இறைஞ்சினார். அப்போதும் தன்னை ஈன்ற தந்தை மீது கொண்ட துக்ககரமான நினைவுகளிலிருந்து அவரால் தப்பிக்க முடியவில்லை. பயிற்சியாளன் மத பேதம் நிரம்பிய, 'நற்செய்தி'யில் ஜீஸசுக்கும் அட்சரசீவகனுக்கும் கோவிலில் நடக்கும் விவாதத்தைக் குறிப்பிட்டு கடைசி வரிகளை எழுதினான்: குற்ற உணர்வு என்பது ஓர் ஓநாய். அது தன் தந்தையை விழுங்கியது; பொல்லாத தன் குழந்தையையும் உண்டு விடுகிறது. நீங்கள் கூறும் ஓநாய் ஏற்கனவே என் தந்தையை விழுங்கிவிட்டது. கூடிய விரைவில் இது உங்களுக்கும் நடக்கும். நீங்கள் எப்போதாவது விழுங்கியதுண்டா? விழுங்கியதை வெளியே கொண்டு வந்து உமிழ்ந்ததுண்டா?'

வடக்கு ஜெர்மனியின் பேரரசர் சார்லமேன் ஓர் விகாரையை உருவாக்காமல் இருந்திருந்தால், அந்த விகாரை முன்ஸ்டர் நகரமாக முன்பு இல்லாதிருந்தால், பதினாறாம் நூற்றாண்டில் பிராஸ்டண்டுகளுக்கும் கத்தோலிக்கர்களுக்கும் நடந்த பயங்கரமான போரை ஓர் இசைநாடகமாகத் தன் ஆயிரத்து இருநூறாவது ஆண்டு விழாக் கொண்டாட்டத்தில் முன்சர் நடத்தாமலிருந்திருந்தால், 'கடவுளின் பெயரால்' என்ற நாடகத்தைப் பயிற்சியாளன் எழுதியிருக்க மாட்டான். மறுபடியும் தன் தர்க்க உணர்வுகளையே வெளிச்சம் காட்டும் விளக்கு என அவன் கருதி, மத நம்பிக்கைகளைச் சூழ்ந்திருந்த சிக்கல்களைப் பிரித்தெடுக்க முயன்றான். ஏனெனில், இம் மதச் சிக்கல்கள் மனிதர்கள் ஒருவரை ஒருவர் அடித்துக் கொன்று போடும் நிலைக்குத் தள்ளியிருந்தன. பயிற்சியாளன் மறுபடியும் அப்போது பார்த்தது முகமூடியால் மறைக்கப்பட்ட சகிப்புத்தன்மைசிறிதும் இல்லாத நிலைமையை. முன்ஸ்டரில் இத்தகைய சகிப்பற்ற தன்மைதான், கட்டுப்பாடற்ற தாக்குதலை இரு கட்சிகளும் ஏற்று, அவர்களையே கொலைவெறி நிரம்பிய போருக்கு இரையாக்கியது.

இந்த யுத்தம் இரண்டு கடவுள்களை சார்ந்திருந்த கட்சிக்காரர்களுக்கு நடுவே ஏற்படவில்லை. ஒரே ஒரு கடவுளுக்காகத்தான் நடந்தது. பிராட்டஸ்டன்ட்டுகளும் கத்தோலிக்கர்களும் தமது குருட்டு நம்பிக்கைகளால் தவறவிட்ட முக்கியமான விஷயம்: தீர்ப்பு நாளன்று இரு கட்சியினரும் தமக்கு கிடைக்கும் பரிசு/தண்டனைக்காகக் காத்திருக்கையில் கடவுள் - அவரது தீர்ப்பு மனிதகுல நன்மையை ஒட்டியது என்றால் - இரு கட்சியினருக்கும் அவர் தேவலோகத்தைத்தான் தர வேண்டும். ஏனென்றால், இருவரும் அதனைத்தான் வெகுவாக நம்பினர். முன்ஸ்டரில் நடந்த கொலை வதை பயிற்சியாளனுக்கு மதங்கள், அவை தரும் வாக்குறுதிகளுக்கு அப்பால், எப்போதும் மனிதர்களை ஒன்றுபடுத்தியதில்லை என்பதை உணர்த்தியது. போரைப் புனிதப் போர் என்று அழைக்கும் அபத்தத்தின் உள்ளர்த்தம் என்ன? கடவுள் தன் மீதே தாக்குதல் நடத்திப் போர் புரியப் போகிறார் என்றா?

'குருடர்கள்' என்று பயிற்சியாளன் நினைத்தான். 'நாம் எல்லோருமே குருடர்கள்.' பிறகு உட்கார்ந்து 'குருட்டுத்தனம்' என்ற நாவலை எழுத ஆரம்பித்தான். 'வாழ்க்கையை நாம் அவமதிக்கையில் அடிப்படை நாகரிகத்தை இழந்து செயல்படுபவர்களாக ஆகிறோம். வலிமைஉடையவர்கள் தினமும் மனித மேன்மையை இழிவுபடுத்துகிறார்கள். உண்மையைப் பின்னுக்குத் தள்ளிவிட்டுப் பொய்கள் முன் வந்து நிற்கின்றன. சக மனிதர்களை மதிக்காது மனிதன் தன்னையே தாழ்த்திக்கொள்கிறான்; என்பதை இந்நாவலைப் படிக்கும் வாசகர்கள் அறிய வேண்டும் என்று பயிற்சியாளன் நினைக்கிறான்.

பிறகு குருட்டுத்தனத்தால், நியாயத்தை மறந்து கிளம்பி வரும் பேய்களை ஓட்டுவது போல மிக எளிதான ஒரு கதையை எழுதினான். 'மனிதர்கள் ஒருவரை ஒருவர் அண்டியிருப்பதுதான் வாழ்க்கை கற்றுத் தரும் பாடம்' என்று உரைத்த அதற்கு 'எல்லாப் பெயர்களும்' என்று தலைப்பு தந்தான். இருப்பவர்களின் இறந்தவர்களின் பெயர்கள்!

முடிவாக இந்தப் பக்கங்களை வாசித்த குரல் என் பாத்திரங்களின் ஒன்று சேர்ந்த குரல்களின் எதிரொலிதான். எனக்கென்று தனியே ஒரு பெரிய குரல் ஒலி கிடையாது. இவை பெரிய விஷயங்களல்ல என்று யாராவது நினைத்தால், மன்னிக்கவும் இவைதான் எனக்கு எல்லாமே.

"ஸிந்துஜா" <weenvy@gmail.com>

# ஒரு விடுமுறை பயணம்

பிபுதிபூஷண் பந்தோபாத்யாய்

தமிழில்: அருந்தமிழ் யாழினி

வெற்றிலைப் பெட்டியையும் கூடவே புகையிலையையும்அலுவலகத்திலேயே மறந்து வைத்துவிட்டார் கோபி கிருஷ்ணபாபு.போபஜாரின் நடைபாதையை கடக்கும் போது தான் குடையையும் மறந்து வைத்துவிட்டு வந்தது நினைவுக்கு வந்தது. மழை வராது என்று அவர் நினைத்தது தவறென்று தோன்றியது. அந்த மத்திய சாலையிலுள்ள கட்டிடங்களை பெரும் கருமேகங்கள் சூழ்ந்திருந்தன.

வெற்றிலைப் பெட்டி இல்லாமல் இருப்பதென்பது அவருக்கு சாத்தியமில்லாத ஒன்று. மேலும் அது எளிதில் யார் வேண்டுமானாலும் திருடிச்செல்லக்கூடிய பொருளும் கூட. எனவே, அவர் திரும்பவும் அலுவலகத்திற்கு சென்றார். அங்கு யாரும் இல்லாதபோதும் கூட அந்த அலுவலகத்தின் பொறுப்பதிகாரி மிகவும் முனைப்புடன் வேலை செய்து கொண்டிருந்தார். அது சர்வநிச்சயமாக மேலதிகாரியை ஈர்ப்பதற்காகவே என்பது அப்பட்டமாக தெரிந்தது. 'நாசமாய் போ', என நினைத்துக்கொண்டார் கோபி கிருஷ்ணா.





ஒரு நாளைக்கு ரூ.150க்கான வேலையை அவர்கள் ஒவ்வொருவரும் செய்திருக்கவேண்டும். இல்லையேல் உயரதிகாரியால் வேலையைவிட்டு அனுப்பப்படலாம். யாருக்குத் தெரியும் காலம் இவ்வளவு கடினமாக இருக்குமென்று?சம்பளம் 50 ரூபாயோடு நின்றுவிட்டது. அதற்குப் பிறகு ஊதிய உயர்வு என்று ஒரு பைசா கூட அதிகமாக வரவில்லை. அதிக நேரம் வேலை செய்தால் காசு கொஞ்சம் கூட வரும்தான். ஆனால், அதற்கு சில பேர் மட்டுமே தேர்வு செய்யப்படுவார்கள். இதில் ஒரு நல்லது என்னவென்றால் அவர்கள் வீட்டுக்குத் தேவையான மளிகைப் பொருட்களை அந்த அலுவலகமே தந்துவிடுகிறது. இல்லையேல் அவர்கள் குடும்பம் எப்பொழுதோ பசியால் செத்துப்போயிருக்கும்.

அவருக்கு மிகவும் பசித்தது. தெருவில் ஒரு விற்பனையாளர் சூடாக கச்சோரி தயார் செய்து கொண்டிருந்தார். அதன் விலை நிச்சயமாக நான்கு பைசாவாவது இருக்கும். அவருக்கு அதை வாங்கவேண்டுமென்றிருந்தது. ஆனால், அந்த சூழ்நிலையிலா அவர் இருக்கிறார்? அதற்கு பதில் வேறு ஒரு தேநீர் கடையில் அரை கோப்பை தேநீரும் இரண்டு பைசாக்கு ஒரு சிகரெட்டையும் வாங்கி அவர் பசியை மறக்க முயற்சி செய்தார்.

அருகில் இருக்கும் அந்த சிவப்பு நிற கட்டிடம் ஒரு காலத்தில் தங்கும் விடுதியாக இருந்தது. 50/2, தன்வந்திரி போஸ் தெரு. கோபி கிருஷ்ணா அப்படியே கணக்கு போட ஆரம்பித்தார். அது எப்படியும் 33 வருடத்திற்கு முன்பு இருக்கும். அப்போது அவர் பங்கபாஸி கல்லூரியில் மூன்றாம் ஆண்டு மாணவர். அந்த காலம் அடடா! எத்தனை நண்பர்கள்...பிபின், கண்ணு,பினோத் பாபு, ஷீல்,மோத்தி,கங்லா, ஸ்குவிண்டி ஷம்பு,சுஷோபன் மித்ரா என எவ்வளவு நட்பு, எவ்வளவு அன்பு, எவ்வளவு கருத்துப்பரிமாற்றம்.

பெரும் இலட்சியம் அவர்களுக்கு இருந்தது. வீட்டில் இருப்பவர்களை பற்றிய நினைப்பில்லாமல் மும்பைக்கு சென்று அதிக லாபமீட்டக்கூடிய வேலையில் அமரவேண்டும். ஒரு அழகான பார்சி பெண்ணை திருமணம் செய்துக்கொண்டு ஒரு வெள்ளைக்கார முதலாளி போல இருக்கவேண்டுமென்றெல்லாம் கனவு கண்டார். ஆனால், எதற்காக ஒரு பார்சி பெண்ணை திருமணம் செய்துகொள்ள வேண்டுமென நினைத்தார்?அது சரி... ஒரு வேளை ஈடன் கார்டன் அருகில் எந்த பார்சி

பெண்ணையோ பார்த்ததின் விளைவாக இருக்கலாம். அதோடு இங்கிலாந்து செல்ல வேண்டுமென்றெல்லாம் அவர் கனவு கண்டார். அது நிச்சயம் நடக்க கூடிய ஒன்றல்ல. ஆனாலும் அது ஒன்றும் காரணமே இல்லாத ஆசையும் இல்லை. அவரின் மொத்த வாழ்வும் அப்போது அவர் முன்பு இருந்தது. ஒரு வேளை ஏதாவது அதிசயம் நடக்கும் போல.

ஸ்குவிண்டி ஷம்பு (ஷம்பு சக்ரவர்த்தி M.B.ஹோமியோ- கோல்ட்டு மெடலிஸ்ட் - ஏழைக்கு இலவச சிகிச்சை) கோபி கிருஷ்ணனின் நண்பர். நீண்ட காலமாக அந்த போபஜார் சந்திப்பில் மருத்துவமனை வைத்துள்ளார். அது அதிக வருமானம் தரக்கூடியதாக இல்லை. கோபி கிருஷ்ணா வீட்டிற்கு போகும்போது அடிக்கடி அங்கு செல்வதுண்டு. அங்கு போனால் தேநீர் இலவசமாக கிடைக்கும். ஒரு இரண்டு பைசாவை சேமிக்கலாம். அதோடு நிறைய நோயாளிகளும் அங்கு இருக்கமாட்டார்கள். எனவே, அது இன்னும் வசதியாய் போய்விட்டது.

அன்று நாளிதழ் படித்துக்கொண்டிருந்தார் ஷம்பு. "வா வா உட்கார். இன்னைக்கு நியூஸ் பாத்தியா? ஜப்பான் திரும்ப ஆறு மைல் போய்ருக்காங்க..." என தன் நண்பனை வரவேற்றார்.

"ஐயோ உன் நியூஸ்ஸ கொஞ்சம் விடுறியா... மத்த நாட்டுல என்ன நடக்குதுன்னு பாத்துட்டே இருக்க அளவுக்கு நம்ம வாழ்க்கை ஒன்னும் அவ்ளோ அதிக நாள் இல்ல. டீ குடிச்ச?"

"இன்னும் இல்ல.வா உட்காரு, நான் வாங்கிட்டு வர சொல்றேன்."

"ஏன் உன் ஸ்டவ்கு என்ன ஆச்சி?"

"பின் செட்டாகல. வாங்க முடியல. என்ன ஆச்சினு தெரியல. நேத்துல இருந்து இம்சபண்ணிட்டு இருக்கு. ஏ மது..."

அங்கு வேலை செய்யும் மது இரண்டு கோப்பை தேநீரை ஒரு பிடிகலனில் கொண்டு வந்தார். அவர்கள் குடித்த பிறகும் தேநீர் கொஞ்சம் மிச்சமிருந்தது. அதை பிறகு குடிக்கலாமென வைத்துக்கொண்டார்கள். தேநீர் அருந்திக்கொண்டிருக்கும் போதே பயணம் பற்றி பேச ஆரம்பித்துவிட்டார்கள். இரண்டு பேரும் பயணங்களில் அதிக விருப்பமுள்ளவர்கள். பயணம் செய்வதில் அவர்களுக்கிருக்கும் விருப்பம், எந்த இடம், என்ன நேரம் சிறப்பானது என்றெல்லாம். ஆனால், குடும்பம், மனைவி, பிள்ளைகள் என சிக்கிக்கொண்டிருப்பவர்கள். அந்த அளவிற்கு செலவு செய்யும் சூழலும் அவர்களுக்கு இல்லை. இருந்தாலும் அதைப்பற்றி பேசுவது அவர்களுக்கு மகிழ்ச்சியளித்தது. ஷம்பு ஒரு முறை மகராவிற்கு சென்றிருக்கிறார். தன் அத்தையின் வீட்டிற்கு. கோபாலகிருஷ்ணன் அதை விட கொஞ்சம் தாண்டி பர்தமான் சென்றிருக்கிறார் அவ்வளவே. இரண்டு பேருக்குமான நீண்ட பயண அனுபவமென்றால் இவைதான்.

ஆனால், ஒவ்வொரு ஆண்டு ஆயுத பூஜை விடுமுறைக்கு முன்பும் பயணத்திற்கான எல்லா திட்டங்களையும் போட்டுவிடுவார்கள். "நிஜமா இந்த வருடம் எங்கயாவது போறோம்...நான் என்ன சொல்றேன்னு புரியுதா? நாம எது எதுக்கோ செலவு பன்றோம், ஒரு 40 ரூபாய் இதுக்காக சேர்த்துவச்சா காசி போகலாம்."

காசியா,கயாவா இல்ல சண்டால் பர்கனா? என இருவருக்கும் விவாதம் தொடங்கும். அப்போதைக்கு அந்த திட்டங்களை ஒத்திவைப்பார்கள். அடுத்த நாள் அதே கேள்வி தொடரும். "என்ன சொல்கிறாய்? பஹல்பூரை முடிவு செய்து விடலாமா?நாம் இதுவரை மலை பிரதேசத்திற்கு சென்றதே இல்லை. பஹல்பூரில் மலைகள் இருக்கின்றனவா?அது எனக்கும் உறுதியா தெரியாது. சீக்கிரமாகவே பூஜை நாளும் வருகிறது."

அந்த ஒரு மாதத்திற்கு முன்பாகவே அருகிலும் தூரமும் உள்ள நிறைய இடங்களை பற்றி பேசுவார்கள். பேஷ்வர் கஷ்மீர், டெல்லி, ஜெய்ப்பூர் பிருந்தாவன் ஷில்லாங், பிர்ப்ஹும் மாவட்டத்தில் உள்ள நல்ஹாட்டி வரை. இவ்வளவு திட்டம்தீட்டியும் இறுதியில் எங்கும் செல்லாமல் அவர்கள் திட்டம் முடியும். ஒன்று ஷம்பு அவருடைய நில உரிமையாளரால் மூன்று மாதம் வாடகை தராமல் இருப்பதற்காக மிரட்டப்படுவார். அல்லது கோபி கிருஷ்ணாவின் இளைய மகன் டைபாய்டு நோயினால் பாதிக்கப்படுவான். அவ்வளவுதான் இப்படி அவர்களின் எல்லா திட்டங்களும் காற்றில் கரைந்துவிடும்.

இது பல வருடங்களாக தொடர்வது. இருந்தாலும் அந்தப் பயண விரும்பிகள் அவர்களுடைய கனவை விடுவதாக இல்லை. அவர்களுடைய திட்டம் பருவ காலத்தில் தொடங்கி பூஜை விடுமுறை முன்பு வரை தொடரும். திட்டம் போடுவதால் செலவா ஆகி விடப்போகிறது? ரயில் அட்டவணையை பார்ப்பது, தூரப்பிரதேசத்தின் பெயர்களை கண்டுபிடிப்பது அவர்களுக்குள் மிகப்பெரும் மகிழ்ச்சி உருவாக்கியது.

அன்று கோபி கிருஷ்ணா தேநீர் அருந்திக்கொண்டே,"ஆயுத பூஜைக்கு இன்னும் ஒரு மாதம் தான் இருக்கிறது" என்றார். "இந்த முறை நிச்சயமாக நாம் எங்காவது செல்ல வேண்டும். இன்னைக்கு முடிவு செய்துவிடலாம். என்ன சொல்கிறாய்? அட்டவணையை தயார் செய்துவிட்டாயா? இதோ அட்டவணை தயாராகிவிட்டது."

யாரும் எங்கும் போகாவிட்டாலும் அட்டவணை



எப்போதும் தயாராக இருக்கும். ஷம்பு அவருடைய மூக்கு கண்ணாடியை அணிந்து ஒவ்வொரு பக்கங்களாக திருப்ப ஆரம்பித்தார்.

“சித்ரகூட் நல்ல இடம் என்று கேள்விப்பட்டேன். உனக்கு அதைப் பற்றி ஏதாவது தெரியுமா?”

இது கிட்டத்தட்ட ஒரு கண் தெரியாதவர் இன்னொரு கண் தெரியாதவரை வழி நடத்துவது போலதான்.

“ம் ஆமாம் அது ஒரு நல்ல இடம்” கோபி கிருஷ்ணன் சொன்னார்.

“எவ்வளவு செலவாகும் என்று பார். இந்த முறை தயவுசெய்து இல்லை என்று சொல்லாதே சித்ரகூட்டிற்கு செல்லலாம்.”

அவர்கள் பயணங்களில் ஏற்படும் தொய்விற்கு கோபி கிருஷ்ணனின் கருத்து மட்டுமே காரணம் அல்ல என்பதை அவரால் எளிதாக சொல்ல முடியும்.ஆனால்,எதுவும் சொல்லாமல் அமைதியாக இருந்தார். அவர்கள் ரயிலினுடைய பயணச்சீட்டு தொகையை கண்டுபிடித்துவிட்டார்கள். “இருபது

ரூபாயை தங்குவதற்கும் பான், சிகரெட் செலவிலும் சேர்த்துவிடு. இது போர்க்காலம், உனக்கு நான் என்ன சொல்கிறேன் என்று புரிகிறதல்லவா?"

"ஆமாம்... நிச்சயமாக, நிச்சயமாக."

"பிறகென்ன நாம் தயாராகிவிடலாமா? என்ன சொல்கிறாய். ஆயுத பூஜை வெகு தொலைவில் இல்லை."

இதெல்லாம் ஒரு முடிவுக்கு வரும் வரை இன்னும் ஒரு இரண்டு மணி நேரம் அந்த இரண்டு நண்பர்களும் பேசிக் கொண்டிருந்தார்கள். காசை மிச்சப்படுத்துவதற்காக வீட்டிலிருந்தே உணவு கொண்டு செல்லலாம் என்று முடிவெடுத்தார்கள். எல்லாமே விலை அதிகமாக இருந்தது. ஷம்பு அந்தப் பட்டியலில் இன்னும் கொஞ்சம் சேர்த்தார். "கொசுவலை, தலையணை..."

கோபி கிருஷ்ணன் பொறுமையற்றவராய் அவரை நிறுத்தினார். "சரி, சரி நீளமா சொல்லிட்டே போகாத. எல்லாத்தையும் எழுது. நாம முடிவு செய்ய வேண்டும். சரி, கொசுவலை, தலையணை வேறு என்ன? போர்வை..."

"போர்வை?"

"எடை குறைவானது..."

"இது மருத்துவமனையா?" அவர்கள் பேசுவதற்கு இடையில் வெளியில் இருந்து யாரோ ஒருவர் கேட்டார்.

"ஆமாம், ஆமாம் உங்களுக்கு என்ன வேண்டும்?"

"ஹோமியோபதி?" அந்த மனிதர் கேட்டார்.

"ஆமாம். சிறப்பான ஹோமியோபதி. யாருக்காக? யாருக்கு உடம்பு சரியில்லை?"

"யாரும் சுகவீனமாக எல்லாம் இல்லை. சும்மா கேட்டேன்..."

இந்த மனிதன் சென்றுவிட்டான். ஷம்பு எரிச்சல் அடைந்தவராய் திரும்பி பட்டியல் எழுத சென்றார். "அந்த மனுஷன பார்த்தியா தேவை இல்லாம... நேரத்த வீணடிச்சிக்கிட்டு..."

"சரி விடு கனமில்லாத போர்வைனு சொல்லிட்டுருந்த இல்ல அடுத்து?"

நேரம் பத்து மணிக்கு மேல் ஆனதால் அதோடு நிறுத்திவிட்டு அடுத்த நாள் மாலை தொடரலாம் என்று முடிவெடுத்தார்கள்.

கோபி கிருஷ்ணன் வீட்டிற்கு சென்றார். இரவு உணவு முடித்துவிட்டு படுக்கைக்கு சென்றார். ஆனால், அந்தப் பயணம் தொடர்பான திட்டமிடுதலின் பரவசம் அவரை தூங்க விடவில்லை. சித்ரகூட் எவ்வளவு தொலைவிருக்கும்? ஒருவேளை நிறைய காடு மலைகளுக்குள் பயணிக்க வேண்டும் போல. ஒருவேளை அது நீண்ட தொடர் வண்டி பயணமாக இருக்கும். அவர்கள் இருவரும் நிறைய மகிழ்ச்சியாக இருக்க போகிறார்கள். ஆமாம் அவர் ஒரு நல்ல சிகரெட் பெட்டியை எடுத்துக்கொள்ள வேண்டும். விலையுயர்ந்தது? இருக்கட்டுமே அதற்கென்ன. காசை அதிக மதிப்பில்லாதவற்றுக்கெல்லாம் செலவு செய்கிறோமே. இது அவர்களின் வாழ்க்கையின் ஒரு முக்கியமான தருணம். அவர்கள் மலைகளைப் பார்ப்பார்கள். கோபி கிருஷ்ணன் தன் வாழ்நாளில் இதுவரை மலைகளை பார்த்ததேயில்லை. இன்னும் பூஜைக்கு எத்தனை நாட்கள் இருக்கிறது?

கோபி கிருஷ்ணா படுக்கையில் இருந்து எழுந்து நாட்காட்டியை பார்க்க வேண்டியதாக இருந்தது. இன்னும் 26 நாட்கள்தான். அதற்குள் தேவையான பணத்தை ஏற்பாடு செய்ய வேண்டும்.

கோபி கிருஷ்ணன் மனைவியின் பெற்றோர் கொலஹட்டிற்கு அருகில் வசிக்கிறார்கள். அவருடைய தம்பிகளுள் ஒருவருக்கு ராணுவத்தில் வேலை கிடைத்து கான்பூருக்கு சென்றுவிட்டார். பெற்றோரை பார்ப்பதற்காக திரும்பி வந்திருக்கிறார். அவரைப் பார்க்க வேண்டும் என்பதற்காக கோபி கிருஷ்ணனின் மனைவி அவரை நச்சரித்துக் கொண்டிருந்தார். "நாம் ஏன் இந்த பூஜை விடுமுறைக்கு கோலஹட்டிற்கு சொல்லக்கூடாது? அப்படியே தம்பியையும் பார்த்தது மாதிரி இருக்கும்ல."

கோபி கிருஷ்ணனுக்கு எரிச்சலாக இருந்தது,

"ஆமா அந்த பழங்கால கிராமத்திற்கு போய் உன் தம்பியை பார்க்கிற அளவுக்கு எனக்கு எந்த வேலையும் இல்லாம இருக்கு பாரு" என்றார்.

அவருடைய மனைவியும் கொஞ்சம் தெளிவாகவே பதில் சொன்னார். "அவங்க பண்டைய காலத்து ஆளுங்களாவே இருந்தாலும், என்னுடைய தம்பி, உங்களை விடவும் அந்த ஹோமியோபதில தண்ணி விக்கிற உங்க ஃப்பிரண்ட விடவும் நல்ல வேலையில தான் இருக்கான். அவனாச்சும் 150 சம்பாதிக்கிறான். ஆனா நீங்க? கல்யாணமான காலத்துல இருந்து 60 ருவாவோடயே நிக்குது. இரண்டு பேர் மட்டும் பெல்லூர் போனா கூட செலவுபண்ண முடியல உங்களால."

கோபி கிருஷ்ணன் திரும்பி கண்களை மூடிக்கொண்டார். அவளுடன் விவாதம் செய்வதில் எந்த பயனும் இல்லை.

அடுத்த நாளும் தன்னுடைய நண்பனை அலுவலகம் முடிந்து சந்தித்தார் கோபி கிருஷ்ணன். அதே தேநீர். மீண்டும் விவாதம் அதே பயணத்தை பற்றி தொடர்ந்தது. இப்போது ஒரு முக்கியமான கேள்வி என்னவென்றால் யார் எவ்வளவு பணம்

கொண்டு வருவது என்பது. "நேற்று நீ சென்ற பிறகு அஷீ ஷன்யால் வந்திருந்தார். அவர் நிமிஹட்னு ஒரு நிலையத்தை பற்றி சொன்னார். நம்முடைய பயணத்தை அங்கே நிறுத்தினால் பரேஷ்நாத் மலையை ஏறலாம். நாம் ஏன் அப்படி செய்யக்கூடாது? அப்படி செய்தால் ஒரே பயணத்தில் இரண்டு இடங்களை பார்க்க முடியும்" என்று சொன்னார் ஷம்பு.

"பரேஷ்நாத்?"

"ஆமாம். வங்காள சமவெளியின் மிக உயர்ந்த மலைச்சிகரம்."

"சரி சரி, அது நல்ல யோசனையாக தான் தோன்றுகிறது, செய்யலாம்."

"சரி இப்போது அதற்கு ஆகும் பணச்செலவை பார்க்கலாம்... பயணச்சீட்டு, கூடவே உணவு..."

"எதிர்பாராத செலவு..."

"பொருள் எல்லாம் வாங்குனா அதுவே பாதி காசை சாப்பிடும். அதெல்லாம் ஓரமா வை. இப்போதைக்கு முக்கியமானதை கணக்குபோடு."

அந்த மாலைப்பொழுதும் இவ்வாறாகவே செலவழிக்கப்பட்டது.

அடுத்த மாலை பயண சாமான்களைப் பற்றி தொடங்கியது. கொசு வலையை எடுத்து செல்லலாமா வேண்டாமா என. "அதெல்லாம் அந்த நாளே முடிவு செய்யக்கூடிய ஒன்றல்ல. அங்கு கொசு இருக்கிறதோ இல்லையோ கொசு வலையை எடுத்துச் செல்வது புத்திசாலித்தனமானது. மலேரியா ஃபிலேரியானு நிறைய நோய் வரும். அதனால கொசு வலை ரொம்ப முக்கியமானது" என்றார் ஷம்பு. 'மேற்கு வங்காளத்தின் மலைப்பகுதியில் கொசுக்களே இல்லை. அது ஒன்றும் மற்ற பகுதியை போல் சதுப்பு நிலமோ ஈரப்பதம் கொண்டதோ இல்லை. எதற்கு தேவையில்லாமல் சுமந்து செல்ல வேண்டும்' என்பதே கோபி கிருஷ்ணணின் எண்ணமாக இருந்தது. மணி பத்தானது அந்த நாளுக்கான விவாதத்தை முடித்துவிட்டு இருவரும் வீட்டிற்கு சென்றனர்.

அடுத்த நாளுக்கான விவாதம் எந்த உணவை எடுத்துச் செல்வது என்பதை பற்றியதாக தொடங்கியது. வீட்டில் செய்த பரோட்டாவும் உருளைக்கிழங்கு மசியலும் ரயில் பயணத்திற்கு சரியாக இருக்குமென இருவருமே முடிவெடுத்தனர். ரயில் நிலையங்களில் உணவு விலைமிக்கதாக இருந்தது. ஒரு ரூபாய் கொடுத்து வாங்கும் உணவு கூட வயிற்றிற்கு போதுமானதாக கூட இருக்காது.

இப்போது விவாதம் லூச்சி எடுத்து செல்வதா இல்லை பரோட்டா எடுத்து செல்வதா என ஆரம்பித்தது. உருளைக்கிழங்கை வேண்டுமானால் விட்டுவிடலாம் ஏனெனில் அதுதான் விலை அதிகமாக இருக்கிறது. பூசணிக்காய் சப்ஜி எடுத்து சென்றால் என்ன?

இந்த மாதிரியான பேச்சுகளாக சில நாட்கள் சென்றது. அதே சமயம் பூஜை விடுமுறையும் நெருங்கிக்கொண்டே வந்தது. கோபி கிருஷ்ணனை அவரின் முதலாளி அழைத்திருந்தார். "நான் இப்போவே இதை சொல்லிடுறேன். இந்த வருடத்திற்கான பூஜை போனஸ் பட்டியலில் உங்கள் பெயர் இல்லை" என்று சொன்னார்."

"ஏன் இல்லை சார்?"

"ஏனென்றால் போன வருடம் நீங்களும் இன்னும் சிலரும் வாங்கினீர்கள். அதனால் அதை சமன்படுத்துவதற்கு இந்த வருடம் யாரெல்லாம் வாங்கவில்லையோ அவர்களுக்கு தருகிறோம்."

"ஆனால், சார், இது சரியில்லை. போன வருடம் நாங்கள் செய்த சிறப்பான பணிக்காக தானே வெகுமதி வழங்கப்பட்டது. ஆனால், இந்த வருடம் நாங்கள் என்ன தவறு செய்தோம்?"

ஆனால், வழக்கம்போல்தான் வங்காள அலுவலகங்களில் முதலாளியின் முடிவே இறுதியானது. அவர்களோடு விவாதம் செய்வது எந்த வகையிலும் உதவாது. கோபி கிருஷ்ணனுக்கு அந்த மாதத்திற்கான ஊதியம் மட்டுமே கிடைத்தது. ஆனால், மற்றவர்களுக்கோ ஒன்றரை மாதத்திற்கான ஊதியம் வெகுமதியாக கிடைத்தது. அதே நாள் முன் பணத்திற்காக வேண்டி பதிவு செய்தார் கோபி கிருஷ்ணன். ஆனால், 15 ரூபாய் மட்டுமே கிடைத்தது. அவரது சொந்த ஊரிலிருந்து வந்த ஒரு கடிதத்தால் அதையும் அவரால் வைத்திருக்க முடியவில்லை. கொஞ்ச காலமாக சொத்து வரி கட்டாததால் இடத்தை பறிமுதல் செய்யப்போவதாக மிரட்டுகிறார்கள் எனவும் ஆறு கால தவணையாக 8 ரூபாய் 13 அணாவை உடனடியாக கட்ட வேண்டும் எனவும் கோபி கிருஷ்ணனின் அத்தை அந்த கடிதத்தில் எழுதியிருந்தார். அதை பார்த்ததும் கோபி கிருஷ்ணனுக்கு முதலில் கோபம் தான் வந்தது. "அவர்கள் அதை பறிமுதல் செய்யட்டும். நான் அதைப் பற்றி கவலைப்படபோவதில்லை. மண்டிய புதரும் களையும் கொசுவும் இடிந்துபோனதுமான அந்த இடத்துக்கு நான் ஏன் கவலைப்படனும். அந்தத் தோட்டத்துல வர பழங்கள் எல்லாம் அவங்க அனுபவிப்பார்களாம். ஆனா வரி கட்ட மாட்டார்களா? நான் ஏன் கட்டனும்? நானா அங்க வாழுறேன்?"

அத்தை வயதாகி இறந்த பிறகு கோபி கிருஷ்ணன் தான் அந்த இடத்திற்கு சொந்தக்காரர். ஆகவே, அத்தை மட்டுமே வரி செலுத்த வேண்டும் என எதிர்பார்ப்பது சரியாக இருக்காது என கோபி கிருஷ்ணனின் மனைவிதான் அவரை சமாதானப்படுத்தினார்.

அன்று மாலை கோபி கிருஷ்ணன் ஷம்புவின் மருத்துவமனைக்கு சோர்வோடும் மன அழுத்தத்தோடும் சென்றார். அதே மனநிலையோடுதான் அவர் நண்பரும் இருந்தார். தேநீர் மட்டும் அருந்தினார்கள். பயணம் பற்றிய எதையும் பேசவில்லை. கோபி கிருஷ்ணன் தான் கொஞ்சம் தைரியத்தை வரவழைத்து,"ம்... பயணம் பற்றிய யோசனை ஏதாவது இருக்கிறதா?"என கேட்டார்.

ஷம்பு பெருமூச்செறிந்தவராய்,"நான் சம்பாதித்த அனைத்தும்வீட்டில்உள்ளவர்களுக்குதுணிவாங்கவும் பரிசு பொருட்கள் வாங்கவுமே சரியாகிவிட்டது. ஒரு புடவை 43 ரூபாய் என்றால் உன்னால் நம்ம முடியுதா? எல்லாம் எவ்ளோ விலையேறிடிச்சி பார். ஆனால், இன்னும் ஐந்து நாட்கள் இருக்கிறது. ஒருவேளை கடினமான ஏதாவது ஒன்று வரலாமோ என்னவோ" என சொன்னார்.

பிறகு கோபி கிருஷ்ணன் தன்னுடைய நிலையை சொன்னார். அவர்கள் இருவரின் நம்பிக்கையும் அந்த ஐந்து நாட்கள் மேல் நிலைக்கொண்டது. அவரது நண்பரை போலல்லாமல் இந்த ஐந்து நாட்களுக்குள் எந்த பணத்தையும் ஏற்பாடு செய்ய முடியாது. அவ்வளவு ஏன் லாட்டரி சீட்டில் கூட ஜெயிக்க வாய்ப்பில்லை என கோபி கிருஷ்ணனுக்கு தெரிந்தே இருந்தது.

"சித்ரகூட்டிற்கு போகமுடியாவிட்டாலும்... அவ்வளவு தூரம்..." என ஷம்பு ஆரம்பித்தார். "அந்த அட்டவணையில் அருகில் இருக்கும் இடங்கள் உள்ளது. முனிவர் ரிஷ்யாஷ்ரிங்கா ஆசிரமம் இருக்கிறது. கஜ்ரா நிலையத்திலிருந்து ஆறு கிலோமீட்டர் தான். இங்கு இயற்கை காட்சிகள் நன்றாகத்தான் இருக்கும்போலிருக்கிறது.என்னுடைய மச்சினிச்சியும் பரேஷ்நாத் மலைகள் பற்றி சொன்னார். நிமக்ஹட் நிலையத்திலிருந்து ஒரே வழிதான் அது கொஞ்சம் செலவு குறைவு. அங்கு போகலாமா?"

திரும்பவும் 10 மணி வரை இதே பேச்சு தொடர்ந்தது. ரிஷ்யாஷ்ரிங்கா அல்லது பரேஷ்நாத்? எது செலவு குறைவாக இருக்கும் என. அந்த அட்டவணையோடு ஒப்பிட்டு கணக்குபோட்டு பார்த்ததில் ஒருவருக்கு 25இலிருந்து 30 ரூபாய் தேவையாயிருந்தது. அதுதான் இருப்பதிலேயே குறைவானது.

"எப்படியாவதுசமாளிச்சிக்கலாம்" என உறுதியாக சொன்னார் ஷம்பு.

ஆச்சரியமாக கல்கத்தாவில் அப்போது குறிப்பிடும்படி நோய்களும் நோயாளிகளும் குறைந்து இருந்தார்கள். முன்பெல்லாம் ஷம்பு ஒரு நாளைக்கு குறைந்ததுஇரண்டு ரூபாயாவதுசம்பாதித்துவிடுவார். ஆனால், இப்போது 5 அணா மதிப்புள்ள Nux-vomika மருந்து விற்பது கூட கடினமாக இருந்தது. அங்கு நோயாளிகள் மட்டுமல்ல மருந்து வாங்க வரும் வாடிக்கையாளர்கள் கூட வரவில்லை.

இது போதாதென்று கிராமத்தில் வாழ்கை சிரமாயிருக்கிறதென்று ஷம்புவின் தம்பியும் அவன் மனைவியும் அவரின் உதவியை நாடி வீட்டிற்கு வேறு வந்துவிட்டார்கள். ஏனெனில் ஷம்புதான் பிரபலமான மருத்துவராயிற்றே. அவரால் எப்படி அவர் தம்பியை ஏமாற்றமுடியும்.

கோபி கிருஷ்ணனுக்கும் காலம் சற்று கடினமாக தான் இருந்தது. அவருடைய தம்பி மகளும் அவள் கணவனும் அவரை பார்க்க வரும்போது ஐந்து ரூபாய்க்கு ஹில்சா மீனை வாங்கிவந்துவிட்டார்கள். கோபிகிருஷ்ணணின் மனைவிதான் அவர்கள் திரும்பி செல்லும் போது அதற்குண்டான பணத்தை தந்து அனுப்புமாறு நினைவு படுத்தினார்.

"நான் எதற்காக கொடுக்க வேண்டும்? அவ்வளவு விலையில் உயர்ந்த மீனை நானா வாங்கி வர சொன்னேன்? ஏன் அது இல்லைனா பசியோடவே இருந்துடுவோமா நாம?"என கோபத்தில் கத்தினார் கோபி கிருஷ்ணன்.

"ஷ்ஷ்ஷ்... நீங்க அப்படி எல்லாம் பேசக்கூடாது. என்ன இருந்தாலும் அவர் உங்க மருமக புள்ள. அவருக்கு திரும்பிக் கொடுத்து தானே ஆகணும். அவர் மட்டுமா சாப்பிட்டாரு. நம்மளும் தான சாப்பிட்டோம்?"என சமாதானப்படுத்தினார் கோபி கிருஷ்ணனின் மனைவி.

"அதனால் என்ன? அதுக்கு ஒரு ஐந்து அணாவுக்கு கெண்ட மீன் வாங்கிருக்கலாம். ஐந்து ரூபாய்க்கு இதை வாங்கி என்ன கிடைச்சது?"

வழக்கம் போல தான் அந்த விவாதங்களால் எந்த பயனும் இல்லை. விருந்தினர்கள் கிளம்பும்போது மருமகனின் சட்டைப்பையில் ஐந்து ரூபாயை திணித்தார் கோபி கிருஷ்ணன். அவர் எட்டு ரூபாயை சேமிக்கலாம் என நினைத்திருந்தார். ஆனால், ஐந்து ரூபாய் வீணாய் செலவானது.

அந்த இரண்டு நண்பர்களும் ஷம்புவின் மருத்துவமனையில் பேசிக்கொண்டிருந்தார்கள். பயணம் பற்றி எந்த திட்டங்களும் இல்லை. ஏனெனில் அவர்களுக்கு தெரிந்துவிட்டது இந்த வருடமும் எந்த பயணமும் போவதில்லையென.அவர்கள்இப்போதுதாவரவியல் பூங்கா பற்றி பேசிக் கொண்டிருந்தார். அடுத்த நாள் ஆயுத பூஜையின் முதல் நாள்.

கோபி கிருஷ்ணன் அவசரமாக தன் சட்டை பையில் இருந்து ஒரு காகித அட்டையை வெளியே



எடுத்தார். கொஞ்சம் தயக்கத்தோடு,"நான் என்ன சொல்ல வரேன்னா, என் அலுவலகத்திலிருக்கிற பங்க்கு ஷங்கர் இதை என்னிடம் கொடுத்தார். அவரோட சொந்த ஊர் லங்கல்போட்டாவில் பூஜை செய்கிறார்கள் இது அதற்கான அழைப்பிதழ். இரண்டு இரவும் இராமாயணம் பாடுறது, மந்திரம் படிக்குறது அப்புறம் இன்னும் நிறைய இருக்கும். அங்க போகலாமா? ரொம்ப தூரம் கூட இல்ல.பரசத் நிலையத்திலிருந்து இரண்டு கிலோமீட்டர் தான். அது நகரத்தில் இருந்து கொஞ்சம் வெளியே. நாம திட்டம் போட்டபடி பூஜைக்கு நகரத்திலிருந்து வெளியே இருப்போம். அதோட அது நல்ல இடம்னு அவரும் சொல்லி இருக்கார். பசங்கலெல்லாம் ஒன்னா சேர்ந்து ரோடு போட்டு களையெல்லாம் எடுத்துனு நிறைய பண்ணுவாங்களாம். அதோட அங்க ஒரு பழைய சிவன் கோயிலும் இருக்காம். அங்க போகலாம். விடியற்காலையில டட்டாபுகர் லோக்கல் ட்ரெயின் 7 மணிக்கு சீல்டா ஸ்டேஷனிலிருந்து கிளம்பும். அது சுலபமா கிடைச்சுரும். அது கண்டிப்பா ஒரு அற்புதமான பயணமா இருக்கும்" என சொல்லி முடித்தார்.

"இது ஒரு அற்புதமான செய்தி! சரி, சரி போகலாம். நான் சரியான நேரத்துக்கு அங்க இருப்பேன்" என பரவசத்தோடு சொன்னார் ஷம்பு.

அடுத்த மூன்று நாட்களும் அந்த நண்பர்கள் லங்கல்போடாவில் சந்தோசமாக பொழுதைக் கழித்தார்கள்.

பழங்கால சிவன் கோவில், சௌதரியின் பழமையான குளம் என உண்மையாகவே அங்கு பார்ப்பதற்கு பல அழகான இடங்கள் இருந்தன. அந்த கிராமத்து மக்களே தங்களுக்கான சாலையை அமைத்திருந்தார்கள். சனி மற்றும் ஞாயிறுகளில் கத்திரிக்காய், சுரக்காய் உருளைக்கிழங்கு என கிராம சந்தையில் நிறைய விற்றார்கள். பூஜையில் மூன்றாவது நாள் விடிய விடிய இராமாயணம் பாடினார்கள்.அடுத்த நாள் கிருஷ்ணனுடைய நாடகம் இருந்தது. உணவும் அவ்வளவு அற்புதமான இருந்தது. அவர்களை அழைத்த பங்க்கு ஷங்கரின் உபசரிப்பும் மெச்சிக் கொள்வதாய் இருந்தது.

அந்த வருடம் கோபி கிருஷ்ணனும் மருத்துவர் ஷம்புவும் சிறப்பான பயணத்தை மேற்கொண்டார்கள்.

அருந்தமிழ் யாழினி
<aruntamilyazhiniaravindan@gmail.com>

# கி. சரஸ்வதி கவிதைகள்

**ஓவியம்: ஞானப்பிரகாசம் ஸ்தபதி**



## 1. பிழை பழகும் இதழ்

எழுதப் பழகும் குழந்தையெனத்
தடுமாற்றம் மிக்கது
நம் முதல் முத்தம்

நான்கு சுழி ண போடுவது போல
முத்தத்தைச் சற்று
இழுத்து வளர்க்கிறோம்

உதடுகளின் நடுக்கத்தில்
ஒன்றிரண்டு மேலும் கீழுமாக
மூக்கு கன்னம் எனக்
கோடிழுக்கப்படுகிறது

பென்சிலின் நுனியை அழுத்தி
ஒரே இடத்தில் தேங்கிவிடும்
குழந்தையின் அறியாமை
நமக்குள் நிகழ்கிறது

மு விற்கு மு வும்
இ க்கு நீண்டதொரு முந்தானை
இழுப்பும் தரும்
தொடக்கத் தவறுகள்
தொடர்வதில் இனிப்புச்
சேர்கிறது

அழிரப்பர் தொட்ட முதல் தவறென
வியர்வை கொண்டு அழிக்கப்படுகிறது
முத்தப் பிழை



அழித்த இடத்தில் உதட்டால் மீண்டும்
எழுதும் முன்பு
முன்னோட்டம் பார்க்கிறது
மூக்கு நுனி

எழுத்துகளுக்குள்
கண்ணும் மூக்கும் வைத்துச்
சித்திரம் உருப்பெற
உயிரும் மெய்யும்
போதாதெனக் கெஞ்சி

இலக்கணம் மீறி எல்லை கடக்கிறது
முதன் முதல்
முத்தம்

## 2. காதல்

இன்னும் சற்று அருகில் வா
அந்த முதல் நெருக்கம்
நன்றாக நினைவிலிருக்கிறது

நமக்கிடையே ஏதுமற்ற
இடைவெளியில் பரிமாறிக்கொண்ட
இதழ்ச்சுவையை அப்படியே
தரத்தான் இத்தனை
பிரயத்தனம்

கைகள்கோர்த்துக் கொண்ட
அழுத்தத்தில் சில்லிடலும்
வியர்த்தலும் ஒரு சேர நிகழ்ந்ததை
அன்றைக்குப்
போன்றே தந்து விடுகிறேன்

உயிர் தொட்ட முத்தங்கள்
பிறக்கவும் இறக்கவும்
வைத்த அந்த மாபெரும் தருணத்தை
உனக்கு மீண்டும் பரிசளிக்கிறேன்

நாம் தரவும் பெறவுமாக இருந்த
எல்லாவற்றையும் பிரியும் முன்பு
ஒப்படைத்துவிடும் உடன்படிக்கை
எனக்குச் சம்மதம்

இனிக் கவனிப்பாரின்றி காற்றில்
தொலையப்போகும் நம் காதலை
யார் பார்த்துக் கொள்வார் என்ற

கவலையையும் பகிர்ந்து
கொள்ளத்தானே போகிறோம்?

## 3. தீராதது

எவ்வளவு நிறைந்து கிடந்தாலும்
தாகம் தீர்க்க வாய்ப்பதில்லை
கடலுக்கு

அத்தனையும் நீலம் எனினும்
தொட்டா எடுத்து விட முடியும்
வானத்தை?

பரந்துவிரிந்து ஆசை காட்டிக் கிடந்தாலும்
கடற்கரை மணலைத்
தட்டிவிட்டு வருவதுதானே
வழக்கமானது?

அள்ளக்குறையாதெனினும்
தூரத்திலிருந்து மட்டுமே
ரசிக்க வாய்த்த நட்சத்திரத்தின்
பெயரிட்டுக்கொள் என் அன்பிற்கு

## 4. நினைவு

காகிதங்கள் சுமந்து களைத்த
மேசைக்குக் கணினி சுமப்பது
புதிதாகத்தான் இருக்கிறது

எழுதுகோல் செருகப்பட்ட
பாக்கெட்டுகளுக்குக்
கைபேசியைத் தாங்குவதில்
பெருமைதான்

பசையிட்டு ஒட்டிய கடித உறைகளை விட
கடவுச் சொல் போட்டுத்
திறக்கும் மின்னஞ்சல்
நன்றாகத்தான் தோன்றுகிறது

பயோமெட்ரிக்கில் விரல் பதிக்கும்போது மட்டும்
மைப்பெட்டியில் தோய்த்து
ரேகை பதிக்கும் பாட்டி நினைவுக்கு வந்து போவதைத்
தவிர்க்க முடிவதில்லை

## 5. வேறு வேறு

பேப்பருடன் விடிந்து
கிரிக்கெட் மாட்ச்சில்
முடிகிறது அப்பாவின்
ஞாயிறு

கறிக் குழம்பில் விடிந்து
மஞ்சத் தண்ணி தெளித்து
அடுப்படி மெழுகுவதில்
முடிகிறது அம்மாவின்
ஞாயிறு

## 6

சாக்லெட் பேப்பர்கள்
கூழாங்கற்கள்
பிடித்த படங்களின் நறுக்குகள்
மயிலிறகு
வாழ்த்து அட்டைகள்
எனப் பிடித்தவற்றைச்
சேமித்து வைத்த
புதையல் பெட்டிக்கு
குப்பை எனப் பெயரிடப்பட்டது
கணவன் வீட்டில்

## 7. மீளுதல்

உதிர்ந்த
இறகுகள் சேகரிக்கிறேன்
என்றேனும் வந்து
நன்றி கூறிச் செல்லக்கூடும்
அந்தப் பறவைகள்

## 8. இறகெழுத்து

உதிர்ந்து கிடக்கும்
இறகின்
ஒவ்வொரு மயிரிழையிலும்
எழுதப்பட்டிருக்கிறது
பறவை
அதுவரை
அளந்த வானத்தின் குறிப்பு

கி.சரஸ்வதி <ameech2004@gmail.com>

# பாலர் பாடல்கள்

## பாவண்ணன்

இராகவேந்திரா நகரில் இரண்டாவது குறுக்குத் தெருவில் விட்டல்ராவின் வீடு இருக்கிறது. அந்தக் குறுக்குத் தெருவில் அதிக வீடுகள் இல்லை. இடது பக்கத்தில் ஆறு வீடுகள், வலது பக்கத்தில் ஆறு வீடுகள். வலது பக்க வரிசையில் முதல் வீடு இருக்குமிடம் மூலைமனை என்பதால், அதன் வாசல் குறுக்குத் தெருவைப் பார்த்ததாக அமையாமல் பிரதான தெருவைப் பார்த்தமாதிரி இருக்கும். அதற்கப்புறம் வீடு எதுவும் இல்லாத பெரிய வீட்டுமனை. அதற்கு அடுத்தபடி இருப்பதுதான் விட்டல்ராவின் வீடு.

பராமரிப்பே இல்லாத அந்த வீட்டுமனையைச் சுற்றி பெயருக்கு ஒரு சுற்றுச்சுவர் மட்டும் இடுப்பளவு உயரத்தில் இருக்கிறது. உள்ளே பார்த்த இடங்களிலெல்லாம் அடர்த்தியான புதர்கள், முட்செடிகள். அவசரத்துக்கு உள்ளே இறங்கி நடக்கக்கூட முடியாது. அந்த அளவுக்கு காடு மாதிரி அடர்ந்திருக்கும். அந்த மனையை ஒட்டி பாதையோரமாக ஒரு பெரிய வாதுமை மரம். அதன் இலைகள் உதிர்ந்து குப்பையாகி மட்கிய மணம் காற்றில் வீசியபடியே இருக்கும்.

அதற்கு அடுத்த வீட்டில்தான் விட்டல்ராவ் குடியிருக்கிறார்.பெங்களூருக்குவந்தபுதிதில்ஏற்கனவே கட்டி முடிக்கப்பட்டு புத்தம்புதிதாக விற்பனைக்குத் தயாராக இருந்த அந்த வீட்டை வாங்கியிருக்கிறார். கிழக்குப் பார்த்த வாசலோடு வீடு அமைந்திருக்க வேண்டும் என்னும் பெங்களூரு நம்பிக்கையின் அடிப்படையில் கட்டப்பட்ட வீடு அது. தெருவை ஒட்டிய இரும்புகேட் தெற்கு நோக்கி இருந்தாலும், உள்ளே நுழைந்து வலது ஓரமாக அமைந்திருக்கும் சந்து வழியாக நடந்து சென்றுதான் வீட்டு வாசலை அடையமுடியும். அப்படி ஒரு கட்டுமானம். அந்த வீடு மட்டுமல்ல, அந்த வரிசையில் இரு புறங்களிலும் இருந்த எல்லா வீடுகளுமே அந்த அமைப்பில்தான் இருந்தன.

ஒருநாள் பதினொன்றரை மணியளவில் நண்பர் விட்டல்ராவைச் சந்திப்பதற்காக அவருடைய வீட்டுக்குச் சென்றிருந்தேன். பகல்வேளை என்றாலும் பக்கத்துப் புதர்களில் வசிக்கும் கொசுக்களும் பூச்சிகளும் சுதந்திரமாக வீட்டுக்குள் புகுந்துவிடுகின்றன என்பதால் கதவைச் சாத்திக்கொண்டு கூடத்தில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தோம். ஏதோ ஒரு பழைய இலக்கிய நிகழ்ச்சிக்கு அவரும் மா. அரங்கநாதனும் இணைந்து சென்ற பழைய காலத்து அனுபவத்தை விட்டல்ராவ் சுவாரசியமாக விவரித்துக் கொண்டிருந்தார். ஒன்றைத் தொட்டு ஒன்றென பேச்சு வளர்ந்துகொண்டே போய்விட்டது. நேரம் ஓடியதே தெரியவில்லை. மதிய உணவு வேளை நெருங்கியதை உணர்ந்த பிறகுதான் பேச்சை நிறுத்தினோம்.



அவருடைய வீட்டிலிருந்து நடந்து செல்லும் தொலைவில்தான் அடையாறு ஆனந்தபவன் இருந்தது. அங்கே சென்று சாப்பிடலாம் என முடிவெடுத்து கதவைச் சாத்தி பூட்டிக்கொண்டு புறப்பட்டோம்.

விட்டல்ராவ் கதவை இழுத்து பூட்டுகிற சமயத்தில் எங்கிருந்தோ ஒரு சேவல் கூவும் சத்தம் கேட்டது. நேரம் மதியம் ஒன்றரை மணி. அந்த நேரத்தில் அதை நான் எதிர்பார்க்கவில்லை. மேலும் என்னைச் சுற்றி எங்கும் எந்தச் சேவலும் தென்படவும் இல்லை. எப்படி அந்தச் சத்தம் கேட்டது என்று புரியாமல் குழப்பத்துடன் சுற்றிச்சுற்றிப் பார்த்தேன். சில நொடிகளுக்குப் பிறகு மீண்டும் அந்தக் கொக்கரக்கோ சத்தம் கேட்டது. ஆனால், சேவலின் நடமாட்டமே தெரியவில்லை. ஏதோ அசரீரி மாதிரி அதன் குரல் மட்டும் கேட்டது. பதில் தெரியாத குழப்பத்தில் மூழ்கியபடி வீட்டைவிட்டு வெளியே வந்தோம். அதற்குள் மூன்றாவது முறையாகவும் அந்தச் சேவல் கூவும் சத்தம் கேட்டது.

“சார், அது சேவல் கூவுற சத்தம்தான?” என்று விட்டல்ராவிடம் என் சந்தேகத்தைக் கேட்டேன்.

“ஆமாம். சேவல் கூவற சத்தம்தான். அதுல என்ன சந்தேகம்?”

“சத்தம் மட்டும்தான் கேட்குது, சேவலைக் காணோமேங்கறதால

கேட்டேன் சார்."

"அந்தப் புதருக்குள்ளதான் சேவல் எங்கோ இருக்குது. கண்ணுக்குத் தெரியாது. குரலை வச்சித்தான் நாம புரிஞ்சிக்கமுடியும்."

"ஏன் அப்படி?"

"ஒரு திருடன் உள்ள புகுந்து ஓடினாகூட பின்னால போய் கண்டுபுடிக்கமுடியாது. அந்த அளவுக்கு செடியும் செத்தையுமா இப்படிமண்டி கெடக்குது. இந்த லட்சணத்துல சேவலை எப்படி பார்க்கமுடியும்,சொல்லுங்க. அதுவா என்னைப்பார் என்னைப்பார்னு வெளியே வந்து கத்தினாதான் அதைப் பார்க்கமுடியும்."

என்னைவிட உயரமான புதர்கள் மண்டி கொஞ்சம் கூட வெளிச்சம் புக முடியாதபடி அடர்ந்து கிடந்த அந்த இடத்தை ஒருகணம் திகைப்போடு பார்த்துவிட்டுத் திரும்பினேன்.

"அதெல்லாம் சரி சார். இந்தச் சேவல் ஏன் பகல்ல கூவுது. வழக்கமா காலை நேரத்துல கூவுற சேவலைத்தான் நான் பார்த்திருக்கேன்."

இன்னும் நான் அந்த வியப்பிலிருந்து மீள முடியாதவனாகவே இருந்தேன். இரண்டு கேள்விகளுக்கு என்னால் விடை கண்டுபிடிக்க முடியவில்லை. இப்படியும் இருக்குமா என்பது ஒரு கேள்வி. ஏன் இப்படி இருக்கிறது என்பது இன்னொரு கேள்வி.

நான் மௌனமாக நடந்துவருவதை உணர்ந்ததும் விட்டல்ராவ் என்னை உரையாடலுக்குள் இழுக்கும் விதமாக, "எதைப்பத்தி இவ்வளவு தீவிரமா யோசிக்கிறீங்க?"என்று கேட்டார்.

"எல்லாம் அந்த சேவலைப் பத்தித்தான் சார். பொதுவா கோழி, குயில், காகம், தவளை போன்ற சின்னச்சின்ன உயிரினங்களெல்லாம் மனிதர்களைவிட அதிகமான கூருணர்வு கொண்டதுன்னு சொல்வாங்க. இந்தச் சேவல் மட்டும் இரவு பகல் வித்தியாசம் தெரியாம ஏன் குழப்பிக்குதுன்னுதான் புரியலை."

"இதுல ஆராய்ச்சி பண்ணி கண்டுபுடிக்க ஒன்னுமே இல்லை பாவண்ணன். அடர்த்தியா இருக்கிற அந்தப் புதரை ஒரு நிமிஷம் பாருங்க. வெளிச்சம் போகவே வழியில்லை. உள்ள இருக்கிற கோழிக்கு இருட்டா, பகலான்னு தெரிஞ்சிக்கவே வழியில்லை. அது இப்பதான் தூக்கம் தெளிஞ்சி எழுந்ததோ என்னமோ. யாருக்குத் தெரியும்? காலை நேரம்னு நெனச்சிகிட்டு சத்தம் கொடுக்குது."

அவர் சொன்னதை ஏற்றுக்கொள்வதைத் தவிர எனக்கு வேறு வழி தெரியவில்லை. மெதுவாக நடந்து அந்த வீட்டுமனையைக் கடந்தோம்.

"இன்னைக்கு முதல்முதலா நீங்க அந்த சேவல் சத்தத்தைக் கேக்கறதால, உங்களுக்கு அதிசயமா இருக்குது. நான் தினந்தோறும் ரெண்டுமூனு மணி நேரத்துக்கு ஒருதரம் ஆலைச்சங்கு மாதிரி கேட்டுகிட்டேதான் இருக்கறேன். அதனால் உங்களுக்கு ஏற்பட்டிருக்கிற குழப்பம் எனக்கு இல்லாம போயிடுச்சி."

"தெனமும் கேப்பீங்களா?"

"ஆமாம். எந்த நேரத்துல வேணும்ன்னாலும் அது குரல் கொடுக்கும். குறிப்பிட்ட நேரம்னு எதுவும் கிடையாது. சில வீட்டுல வயசானவங்க கேட்ட கேள்வியையே திருப்பித் திருப்பி கேட்டுகினே இருப்பாங்க. பார்த்திருக்கீங்களா?"

"ஆமா. அல்சைமர் பிரச்சினை இருக்கிறவங்க அப்படி கேப்பாங்கன்னு சொல்வாங்க."

"அதே மாதிரியான பிரச்சினைதான் இதுவும். அல்சைமர் மனுஷங்களுக்கு மட்டும்தான் வரும்னு எங்கயாச்சிம் சொல்லியிருக்குதா, என்ன? இந்தச் சேவலுக்கு அல்சைமர் இருக்குதுன்னு நெனைச்சிகிட்டா எந்தத் தொந்தரவும் இல்லை. இந்தக் காதுல வாங்கி, அந்தக் காதுல விட்டுட்டு போயிகிட்டே இருக்கவேண்டிதுதான்."

விட்டல்ராவ் கொடுத்த விளக்கம் தர்க்க அடிப்படையில் பொருந்திப் போவதாகவே இருந்ததால், என் மனமும் அதை ஏற்றுக்கொண்டது.

"இந்தக் கொக்கரக்கோ சத்தத்தை கேட்கும் போதெல்லாம் எனக்கு என்னுடைய சின்ன வயசு ஞாபகம் ஒன்னு வரும் பாவண்ணன்."

அப்படிச் சொல்லத் தொடங்கியதுமே அவர் முகம் மலர்ந்ததைப் பார்த்தேன். அவருக்குள் இருக்கும் சிறுவன் அவருடைய கண்கள் வழியாகப் புன்னகைப்பதுபோல இருந்தது.

"என்ன ஞாபகம் சார்?"

"பள்ளிக்கூடத்துல படிச்ச ஒரு இங்கிலீஷ் ரைம் ஞாபகம். சின்ன வயசுல எனக்கு ரொம்ப புடிச்ச பாட்டு. மனப்பாடமா சொல்லிச் சொல்லி அந்தப் பாட்டு மனசுல பதிஞ்சிபோச்சி."

விட்டல்ராவின் நினைவாற்றலை நினைத்து நினைத்து வியக்காத பொழுதே இல்லை. அந்தப் பாடலை அவர் நிச்சயமாக நினைவில் வைத்திருப்பார் என்று தெரியும். இருந்தாலும் வாய் வரைக்கும் வந்துவிட்ட கேள்வியை என்னால் கட்டுப்படுத்த இயலவில்லை. "இப்பவும் ஞாபகம் இருக்குதா சார்?"என்று கேட்டேன்.

அவர் ஒருகணம் கையை உயர்த்தி "கொஞ்சம் இருங்க" என்பதுபோல அசைத்தபடியே உதடுகள்



மட்டும் அசைய ஒருமுறை மனசுக்குள் சொல்லிப் பார்த்துக்கொள்வதை நான் பார்த்தேன். அடுத்த கணமே "ஞாபகம் இருக்குது, சொல்லட்டுமா?" என்று கேட்டார்.

குழந்தைப்பருவத்துக்கு உரிய ஒரு பாடலை எண்பது வயதைக் கடந்த ஒருவரிடமிருந்து கேட்பதைப்போன்ற பெரிய பேறு எதுவும் கிடையாது என்று நினைத்துக்கொண்டேன். இதுவரை கேட்காத பாடலாக இருந்தால், தெரிந்துகொள்ளலாம் என்கிற ஆசையும் இருந்தது. "சொல்லுங்க சார்" என்று ஆவலோடு சொன்னேன்.

அக்கணமே அவர் நடையை நிறுத்தி ஒவ்வொரு வரியாக நினைவிலிருந்து சொன்னார்.

Cocks crow in the morn
To tell us to rise,
And he who lies late
Will never be wise;

For early to bed
And early to rise,
Is the way to be healthy
And wealthy and wise.

வழக்கமாக கேட்டுக்கேட்டுப் பழகிய பாடலாக இல்லாமல் அந்தப் பாட்டு புதிதாக இருந்ததாலேயே, அதைக் கேட்டதும் உற்சாகமாக இருந்தது. கொக்கொரக்கோ கூவலுக்கும் துயிலெழுவதற்கும் இடையிலான தொடர்பு கண்டங்களைத் தாண்டி நீடிப்பதை நினைத்தால் ஆச்சரியமாகவே இருந்தது.

"பாட்டு ரொம்ப அருமையா இருக்குது சார். இதுவரைக்கும் நான் கேட்காத பாட்டு."

"நாங்க அரூர்ல இருக்கும்போதுதான் ஃபர்ஸ்ட் ஃபர்ம் படிச்சேன். என்.எஸ்.பெரியசாமிங்கறவருதான் எங்க இங்க்லீஷ் சார். நாமக்கல்லிலேருந்து அரூருக்கு மாற்றலாகி வந்திருந்தாரு. இங்கிலீஷ ரொம்ப ரசனையோடு சொல்லிக் கொடுப்பாரு. க்ளாஸ்ல அவரு இந்தப் பாட்ட வரிவரியா சொல்லச் சொல்ல நாங்க அதை திருப்பிச் சொல்வோம்."

அந்தப் பாட்டைக் கேட்டதைத் தொடர்ந்து, இன்னும் ஏதேனும் குழந்தைப்பாடலை நினைவிலிருந்து சொல்லமாட்டாரா என்று தோன்றியது.

"கம்யூனிஸ்ட் கட்சி மேல ரொம்ப ஈடுபாடு அவருக்கு. அதனாலயே அடிக்கடி அவரை ஊரூரா மாத்திகிட்டே இருந்தாங்க. தங்கமான மனுஷன். பிள்ளைகளுக்கு கதைகளையும் பாட்டுகளையும் ரொம்ப ஆசையா சொல்லிக் கொடுப்பாரு. ஒரு இங்கிலீஷ் வார்த்தையை சொல்லும்போதே அதுக்கு தமிழ் அர்த்தம் என்ன, அதை ஒரு வாக்கியத்துல எப்படி பயன்படுத்தறதுன்னு நிறுத்தி நிதானமா சொல்லிக் கொடுப்பாரு."

பாடலிலிருந்து ஆசிரியரை நோக்கி உரையாடல் நீண்டுகொண்டே போனது. அதை மெதுவாக நிறுத்தி, மீண்டும் பாடலை நோக்கித் திருப்பினேன்.

"இன்னும் என்ன பாட்டு ஞாபகத்துல இருக்குது, சொல்லுங்க சார்."

"இன்னும் ஒரு பாட்டா?" என்றபடி விட்டல்ராவ் சிறிது நேரம் யோசித்தார். சில கணங்களைத் தொடர்ந்து "ஆ, ஞாபகம் வந்துட்டுது" என்று

முகம் மலரச் சொன்னார்.

“சொல்லுங்க, சொல்லுங்க சார்” என்று நான் தூண்டினேன்.

“சேவல் கொக்கரக்கோன்னு கூவுதுன்னு சொல்றாங்க இல்லையா? அந்த கொக்கரக்கோ சத்தத்துக்கு இங்கிலீஷ்ல என்ன வார்த்தை பயன்படுத்துவாங்க தெரியுமா?” என்று என்னைப் பார்த்துக் கேட்டார் விட்டடல்ராவ்.

எனக்கு உடனடியாக நினைவுக்கு வரவில்லை. சிறிது நேரம் யோசித்துப் பார்த்துவிட்டு உதட்டைப் பிதுக்கினேன். என் பதிலுக்காக என் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்த விட்டடல்ராவ் புன்னகையோடு Cock - a - doodle - doo என்று சொன்னார்.

தாளத்தோடு கூடிய அந்தச் சொல்லைக் கேட்டதும் அந்தத் தாளத்தில் லயித்துவிட்டேன். அதன் புதுமை ஒரு கணம் என்னை மயக்கிவிட்டது. அந்தச் சொல்லை போதிய கவனத்துடன் உள்வாங்கிக்கொள்ள மறந்துவிட்டேன். வேறு வழி தெரியாமல், “என்ன சொன்னீங்க, இன்னொரு தரம் சொல்லுங்க” என்று மீண்டும் கேட்டேன். அவர் அதே புன்னகையோடும் ராகத்தோடும் Cock - a - doodle - doo என்று ராகத்தோடு இழுத்துச் சொன்னார். அந்தச் சொல்லை நாலைந்து முறை மனசுக்குள்ளேயே சொல்லிச்சொல்லி நிலைநிறுத்திக்கொண்டேன். ஆங்கிலம் புதிய சொற்களை உருவாக்கி நிலைநிறுத்தும் விதம் வியப்பளிப்பதாகவே இருந்தது.

“அந்த Cock-a-doodle-doo வார்த்தையை வச்சி ஒரு பாட்டு இருக்குது. இதுவும் அந்த க்ளாஸ்ல படிச்ச பாட்டுதான். அந்த வார்த்தையால அந்தப் பாட்டு ஞாபகத்துல இருக்குதா, அந்தப் பாட்டால அந்த வார்த்தை ஞாபகத்துல இருக்குதான்னு தீர்மானமா சொல்ல முடியலை. அந்தப் பாட்டு ஒரு கதை மாதிரி இருக்கும்.”

“கதைப்பாட்டா? சொல்லுங்க சார்.”

அவர் ஒருமுறை ஆழமாக மூச்சை இழுத்து விட்டபடி ஒரு சிறுவனுக்கே உரிய உற்சாகமான குரலில் பொருத்தமான ஏற்ற இறக்கத்தோடு வரிவரியாக சொல்லத் தொடங்கினார்.

Cock-a-doodle-doo
My dame has lost her shoe;
My master’s lost his fiddling-stick,
And don’t know what to do.

Cock-a-doodle-doo
What is my dame to do?
Till master finds his fiddling-stick,
She’ll dance without her shoe.

Cock-a-doodle-doo
My dame has lost her shoe,
And master’s found his fiddling-stick;
Sing doodle-doodle-doo

அவர் சொல்லச்சொல்ல ஒவ்வொரு வரியாக நானும் மனத்தில் பதிய வைத்துக்கொண்டேன். கொக்கொரக்கோ சத்தத்தை ஒரு கற்பனைக்கதையோடு இணைத்துச் சொன்ன விதம் மிகவும் ரசனைக்குரியதாக இருந்தது. என்னை அறியாமலேயே நான் கைத்தட்டி என் மகிழ்ச்சியைத் தெரியப்படுத்தினேன். ஆயிரம் பேர் நடமாடிக்கொண்டிருந்த அந்தத் தெருவோரத்தில் நாங்கள் இருவரும் சிறுவர்களைப்போல சிரித்துச் சிரித்து அந்தப் பாடலைக் கொண்டாடினோம்.

“சொல்லச்சொல்ல பாட்டுங்க ஞாபகத்துக்கு வந்துகிட்டே இருக்குது பாவண்ணன்” என்றார் விட்டடல்ராவ். எனக்கும் அதைக் கேட்க ஆசையாக இருந்தது. அவர் பாடிய பாட்டின் வசீகரம் இன்னும் புதிய பாடலைக் கேட்கும் ஆவலை உருவாக்கியது. “சொல்லுங்க சார், எனக்கும் கேக்கறதுக்கு ஆசையா இருக்குது” என்று மீண்டும் அவரைத் தூண்டினேன்.

“பெக்கர் மெய்ட்னு ஒரு பழைய பாட்டு. கொப்பேச்சான்னு ஒரு கோமாளி ராஜா ஒரு பிச்சைக்காரியை கல்யாணம் பண்ணிக்கிறதைப் பத்திய பாட்டு. பரமார்த்த குரு கதை மாதிரி ஒரு கிண்டல் கதை. அந்தமாதிரியான கதைப்பாடல்கள் இங்கிலீஷ்ல ஏராளமா இருக்குது. பாடப்பாட சந்தோஷமா இருக்கும்.”

ஒருமுறை கொப்பேச்சா என்று மனத்துக்குள் சொல்லிப் பார்த்துக்கொண்டேன். என்னமோ நமது ஊரில் சித்தப்பா, பெரியப்பா என்று சொல்வதுபோல இருந்தது.

“பாட்டை சொல்லுங்க சார்.”

தொண்டையைச் செருமிக்கொண்டு விட்டடல்ராவ் பெக்கர் மெய்ட் பாட்டின் வரிகளை சொல்லத் தொடங்கினார்.

Her arms across her breast she laid
She was more fair than words can say
Barefooted came the beggar maid
Before the king Cophetua.

In robe and crown the king step down,
To meet and greet her on her way;
‘It is no wonder,’ said the lords,
‘She is more beautiful than day.’

As shines the moon in clouded skies,
She in her poor attire was seen;
One praised her ankles, one her eyes,
One her dark hair and love some mien.

So sweet a face, such angel grace,
In all that land had never been.
Cophetua swore a royal oath:
'This beggar maid shall be my queen!'

கொப்பேச்சாவின் அறிவிப்பைச் சொல்லும் வரியைச் சொல்லி முடித்த போது விட்டல்ராவால் சிரிப்பை அடக்கமுடியவில்லை. வாய்விட்டு வேகமாகச் சிரித்துவிட்டார். என்னாலும் சிரிப்பைக் கட்டுப்படுத்த முடியவில்லை. நானும் சத்தம் போட்டு சிரித்துவிட்டேன்.

எதிர்பாராதகணத்தில் எல்லாமே தன்னிச்சையாக நடந்தேறிவிட்டது.எங்கள் சிரிப்புச்சத்தத்தைக் கேட்டு சாலையில் நடந்து சென்றவர்கள் எங்கள் பக்கமாக விசித்திரமானதொரு பார்வையை வீசிவிட்டுச் சென்றார்கள். சற்றே தாமதமாகத்தான் நான் அதை உணர்ந்தேன். தொண்டையைச் செருமி அக்கம்பக்கம் பார்த்தபடி இயல்புநிலைக்குத் திரும்பினேன். "இந்தப் பாட்டுங்கள எழுதின பைரன், டென்னிசன் மாதிரியான கவிஞர்கள் எல்லாருமே இங்க்லீஷ்ல பெரிய பிரபலமான கவிஞர்கள். நம்ம பாரதியார் மாதிரியான கவிஞர்கள்னு சொல்லலாம்" என்று விட்டல்ராவ் அடங்கிய குரலில் சொல்லிக்கொண்டே ஆனந்த பவனை நோக்கி நடக்கத் தொடங்கினார். அதைக் கேட்டபடி அவருக்கு அருகிலேயே நானும் நடந்தேன்.

பாவண்ணன்<writerpaavannan2015@gmail.com>

# இஸ்ரேல் - பாலஸ்தீன யுத்தம்
# நதியிலிருந்து கடலுக்கு

**ரதன்**

உலகெங்கும் பாலஸ்தீனத்துக்கு ஆதரவாக போராட்டங்கள் நடைபெற்று வருகின்றன. இஸ்ரேலின் தாக்குதல், குறிப்பாக காசா வைத்தியசாலைகள்மீது மேற்கொள்ளப்பட்ட தாக்குதல்கள், பாலஸ்தீன ஆதரவை அதிகரித்துள்ளது. மேற்குநாடுகளின் பல்கலைக்கழகங்களில் மாணவர்கள் தொடர்ச்சியாக பாலஸ்தீன ஆதரவுக் குரலெழுப்பி வருகின்றனர். Harvard/Harris கருத்துக்கணிப்பின் பிரகாரம் 51 வீதமான அமெரிக்க மாணவர்கள் (18-24 வயதுக்குட்பட்டவர்கள்) பாலஸ்தீனத்துக்கு ஆதரவு தெரிவித்துள்ளனர். உலகெங்கும் பெரும்பாலான பல்கலைக்கழக மாணவர்கள் வார இறுதி நாட்களில் பாலஸ்தீனஆதரவு போராட்டங்களில் பங்குபற்றி வருகின்றனர்.

பாலஸ்தீன ஆதரவு போராட்டங்களில் முன்வைக்கப்படும் கோசங்கள் கவனிக்கப்பட வேண்டியவை. 'from the river to the sea' (நதியிலிருந்துகடலுக்கு). நதி என்பது ஜோர்டான் நதியையும் கடல் என்பது மத்தியதரைக் கடலையும் குறிக்கும்.

மேற்கு கரையின் ஒரு எல்லை ஜோர்டான் நதி. காசா மத்திய தரைக்கடலுக்கு அருகில் அமைந்துள்ளது. இந்தக் கோசமானது இஸ்ரேலின் இருப்பை கேள்விக்குறியாக்கின்றது. இஸ்ரேலின் பிரதமர் பென்ஞ்சமின் நெற்றியான்குவின் கட்சியானLikudஇதே சுலோகத்தை இஸ்ரேல் சார்பாக பிரச்சாரம் செய்தது குறிப்பிடத்தக்கது.

1977 காலப் பகுதியில் பாலஸ்தீன ஆயுத இயக்கங்கள் தீவிரமாக இயங்கி வந்தன. அவர்கள் இரண்டு நாடுகள் (State) தீர்மானத்தை எதிர்த்தார்கள். நெற்றியான்குவின் கட்சி, 'நதியிலிருந்து கடலுக்கு பாலஸ்தீனத்தை அமைக்க பாலஸ்தீன ஆயுத அமைப்புக்கள் விரும்புகின்றன' என பிரச்சாரம் செய்தது. உண்மையில் நெற்றியான்குவின் கட்சி ஒரு அகண்ட இஸ்ரேல் அமைப்பதையே விரும்புகின்றது. அகண்ட இஸ்ரேலுக்குள் ஜோர்டான், ஈரான், சிரியா, லெபனான் போன்ற நாடுகளும் அடங்கும்.



பிரித்தானிய தொழிற்கட்சி பாராளுமன்ற உறுப்பினர் ஆண்டி மெக்டொனால்ட் (Andy McDonald), 'between the river and the sea' (நதிக்கும் கடலுக்கும் இடையில்) என்ற சுலோகத்தை முன்வைத்து பேசியமைக்காக கட்சியிலிருந்து தற்காலிகமாக நீக்கப்பட்டுள்ளார். 'We will not rest until we have justice. Until all people, Israelis and Palestinians, between the river and the sea, can live in peaceful liberty' (எங்களுக்கு நீதி கிடைக்கும் வரை ஓய மாட்டோம். நதிக்கும் கடலுக்கும் இடையே உள்ள இஸ்ரேலியர்கள் மற்றும் பாலஸ்தீனர்கள் அனைவரும் நிம்மதியாக சுதந்திரமாக வாழும் வரை,'எங்களுக்கு நீதி கிடைக்கும் வரை ஓய மாட்டோம்)என்பதுவேஅவர்முன்வைத்தபேச்சு.

CNNஇல் அரசியல் ஆய்வாளராகவுள்ள Marc Lamont Hill, சி.என்.என்னிலிருந்து நீக்கப்பட்டுள்ளார். இவரும் மேற்கூறப்பட்ட சுலோகத்தை முன் வைத்து கருத்து தெரிவித்தமையே காரணம் என சி.என்.என். நிர்வாகம் தெரிவித்துள்ளது. ரெம்பில் பல்கலைக்கழக பேராசிரியரான இவர், 'இக்கோசம் இஸ்ரேலிய மக்களுக்கு எதிரானதல்ல. இஸ்ரேலிய - பாலஸ்தீன சமாதானத்தையே வலியுறுத்துகின்றது' என்று கருத்து தெரிவித்துள்ளார். யூத ஊடகங்களும் அரசியல்வாதிகளும், 'இக்கோசம் இஸ்ரேலின் இருப்பை கேள்விக்குறியாக்குகின்றது. இஸ்ரேலை வெளியேற்றும் குரல். அங்கிருந்து வெளியேற்றப்பட்டால் எங்கு யூதர்கள் செல்வார்கள்' என கேள்வியெழுப்புகின்றன.

1967 போரின் பின்னர் இஸ்ரேலிய ஊடகவிளம்பரங்கள், இஸ்ரேலின் இருப்பை நிலைநாட்ட 'பாலஸ்தீனர்கள் யூதர்களை கடலுக்குள் எறிய விரும்புகின்றார்கள்" என விளம்பரப்படுத்தின. ஆனால், மேற்குகரை அரசாங்கமோ ஹமாசின் அரசியல்



தலைவர்களோ இவ்வாறான கருத்துக்களை தெரிவிக்கவில்லை.

1967 போரின்போது எகிப்தின் கட்டுப்பாட்டுக்குள் இருந்த காசாவையும் ஜோர்டானின் கட்டுப்பாட்டுக்குள் இருந்த மேற்குகரைப் பகுதியையும் இஸ்ரேல் கைப்பற்றியது. இவற்றைவிட சிரியாவின் Golan Heights மற்றும் எகிப்தின் Sinai Peninsula ஆகிய பகுதிகளையும் கைப்பற்றியது. இன்று ஜோர்டானில் சுமார் 3 மில்லியன் பாலஸ்தீனர்கள் வாழ்ந்து வருகின்றனர். ஜோர்டானிய பிரசாவுரிமை பெற்றவர்களையும் ஜோர்டானிய அரசு அகதியாகவே கருதுகின்றது.

2015 அக்டோபர் 21ஆம் திகதி நியுயோர்க் ரைம்ஸ் பத்திரிகை, இஸ்ரேலிய பெஞ்சமின் நெதன்யாகு குறிப்பிட்டதாக ஒரு செய்தியை வெளியிட்டுள்ளது."பாலஸ்தீனர்கள் ஹோலோகாஸ்ட் (Holocaust) ஈர்க்கப்பட்டுள்ளார்கள். ஹிட்லருக்கு பாலஸ்தீனர்களே ஆலோசனை வழங்கியுள்ளார்கள்" என பேசியதாக அச்செய்தி தெரிவிக்கின்றது. (JERUSALEM - Israeli historians and opposition politicians on Wednesday joined Palestinians in denouncing Prime Minister Benjamin Netanyahu of Israel for saying it was a Palestinian, the grand mufti of Jerusalem, who gave Hitler the idea of annihilating European Jews during World War II. (Oct. 21, 2015))

பாலஸ்தீன ஆதரவு ஊர்வலத்தில், மிச்சிக்கன் மாநில அமெரிக்க காங்கிரஸ் உறுப்பினர் 'நதியிலிருந்து கடலுக்கு' என்ற சுலோகத்தை தாங்கிச் சென்றதாக குற்றஞ் சாட்டப்பட்டிருந்தார். இவர் அமெரிக்க காங்கிரஸில் தணிக்கைக்கு உள்ளாக்கபட்டுள்ளார். இவர் பாலஸ்தீன அமெரிக்கர். இவர் முன்னதாக இஸ்ரேலின் இனவெறி மனிதத்தை அழிக்கின்றது என்று தெரிவித்திருந்தார்.

செக் குடியரசு சுலோகங்களுக்கு எதிராக சட்டநடவடிக்கை எடுக்கவும் சுலோகங்களை தடுக்க சட்டமியற்றவும் உள்ளது.

'நதியிலிருந்து கடலுக்கு' சுலோகத்தைவிட வேறு பல சுலோகங்களும் முன்வைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் சில ...Silence is Violence, I stand with Palestine, Enough is Enough - Resistance is the only answer, Stand with Palestine - End the occupation now, Save Gaza-Free Palestine.

தொடர்ச்சியான போராட்டங்கள் இஸ்ரேல் மீதான மேற்கின் ஆதரவுக் குரலை அசைத்தபோதும், இங்கிலாந்தில் புகையிரத நிலையங்களில் பாலஸ்தீன கொடிகளை கட்டுவது போன்ற சம்பவங்கள் மக்கள் மத்தியில் அதிருப்தியை ஏற்படுத்துகின்றன.

தற்சமயம் உடனடித்தேவை போரை நிறுத்தி, காசா மக்களை காப்பற்றுவதாகும். அதற்கு இப்போராட்டங்கள், ஊர்வலங்கள் வழிவகுத்தால் அதுவே இப்போராட்டங்களின் வெற்றியாகும். 'பாலஸ்தீன விடுதலை' போன்ற சுலோகங்கள் அரசியல்மயப்பட்டவை. அரபாத் தலையிலான பாலஸ்தீன விடுதலை இயக்கம் 1993இல் 'இரண்டு நாடுகள்' தீர்வை ஏற்றுக்கொண்டு அங்கு இஸ்ரேலின் கட்டுப்பாட்டுக்குள்ளான பாலஸ்தீன அரசு இயங்குகின்றது. இன்று பல உலகநாடுகளும் அதுவே தீர்வு எனத் தெரிவிக்கின்றனர்.

'ஃபிரிபாலஸ்தீன்' என்ற கோசமானது மேற்கு கரையிலிருந்தும் காசாவிலிருந்தும் இஸ்ரேல் இராணுவத்தை வெளியேற்று என்பதேயாகும். மற்றையது குடியேற்றத் திட்டங்களை நிறுத்து என்பதாகும். ஆனால், இதனை இஸ்ரேலிய ஊடகங்கள் தங்கள் இருப்புக்கு எதிரானதாக பிரச்சாரம் செய்கின்றன.

கடந்த வாரம் Stuart Seldowitz (முன்னால் அமெரிக்க வெளியுறவு அமைச்சின் அதிகாரி) நியுயோர்க் நகர வீதியோர முஸ்லீம் வணிகரின் கடைக்கு முன்னால் நின்று, "கொல்லப்பட்ட பாலஸ்தீன சிறுவர்களின் எண்ணிக்கை காணாது" (the death of 4,000 Palestinian children in Gaza 'wasn't enough) என பாலஸ்தீனத்துக்கு எதிராக கருத்துக் கூறியமைக்காக கைது செய்யப்பட்டார்.

இவர் ஒரு விதிவிலக்கு. ஆனால், வட-அமெரிக்காவில் இஸ்ரேல் ஆதரவுக் குரல்களுக்கு எதிரான சட்ட நடவடிக்கைகள் மிகமிகக் குறைவு. பெரும்பாலான ஊடகங்கள் யூத செல்வந்தர்கள் கைவசமே உள்ளன. உலகில் அதிகளவு யூதர்கள் அமெரிக்காவிலேயே வாழ்கின்றனர் (51 வீதம்) இஸ்ரேலில் 30 வீதமான யூதர்களே வாழ்கின்றனர்.

பாலஸ்தீன ஆதரவுக் குரலெழுப்பியபலர் பாதிக்கப்பட்டுள்ளனர். இரண்டு ஹாலிவுட் நடிகைகள் பலகோடிகள் சம்பளத்தை இழந்துள்ளனர். ஆச்சரியம் இவர்கள் இருவரும், 'பாலஸ்தீனத்துக்கு ஆதரவாக குரலெழுப்பியமை தங்களுக்கு மகிழ்ச்சியாகவுள்ளது. தங்களுக்கு ஏற்பட்ட இழப்பைவிட காசாவில் கொல்லப்பட்ட சிறுவர்களின் இழப்பு ஏற்றுக்கொள்ள முடியாது' எனத் தெரிவித்துள்ளனர்.

Scream 7 படத்திலிருந்து Melissa Barrera நீக்கப்பட்டுள்ளார் இவர் மெகசிக்கோவைச் சேர்ந்தவர். ஹாலிவுட்டில் பல படங்களில் நடித்துள்ளார். 77 வயதான அமெரிக்க நடிகையான Susan Sarandon நியுயோர்க்கில் தெரிவித்த பாலஸ்தீன ஆதரவுக் கருத்துக்களுக்காக Dead Man Walking படத்திலிருந்து நீக்கப்பட்டுள்ளார். காரணம், ஹாலிவுட்டின் மிகப்பெரிய முதலீட்டாளர்கள் யூதர்கள்.

ஒன்ராரியோ பாராளுமன்ற ஹமில்ரன் மத்தியதொகுதி உறுப்பினர் Sarah Jama தனது சமூக வலைத்தளத்தில் தெரிவித்த கருத்து சர்ச்சையை ஏற்படுத்தியுள்ளது. இவரை பாராளுமன்றத்திலிருந்து வெளியேற்றவேண்டும் என ஒன்ராரியோ மாகாண முதல்வர் டக்போர்ட் கூறியிருந்தார். இவர் தனது கருத்தை தனது சமூக வலைத்தளத்திலிருந்து நீக்கவில்லைஎன்றசர்ச்சையும்எழுப்பப்பட்டது. அவர் தனது பதிவில் apartheid (நிறவெறி) என்ற சொல்லைப் பாவித்தமையும் இவருக்கு எதிரான விமர்சனத்துக்கு பிரதான காரணமாக அமைந்திருந்தது.

காசா மக்கள் ஆதரவு போராட்டங்கள் தொடர்கின்றன. இவை ஒருநிரந்தரபோர்நிறுத்தத்துக்கு வழிவகுக்க வேண்டும். அதேசமயம் ஹமாஸ் தாக்குதல்கள் மேற்கொள்ளும்பொழுது தனது மக்களை கவனத்திற் கொள்ளவேண்டும்.

இரண்டு மாத காலப் போரில் இதுவரை 14,532 (60 நாட்களுள்) பாலஸ்தீனர்கள் கொல்லப்பட்டுள்ளனர். உக்ரேன் யுத்தத்தில் கடந்த 645 நாட்களுள் கொல்லப்பட்டோரின் எண்ணிக்கை 9614. வெவ்வேறு அறிக்கைகள் காசாவில் கொல்லப்பட்ட சிறுவர்களின் எண்ணிக்கை 40-50 வீதம் எனக் கூறுகின்றன. உக்ரேன் போரில் கொல்லப்பட்ட சிறுவர்களின் எண்ணிக்கை 560 அதாவது 5.82 வீதமாகும். அக்டோபர் 28 'The Economist' சஞ்சிகை காசாவில் இதுவரை 23,947 கட்டிடங்கள் குண்டு வீச்சால் சேதமடைந்துள்ளன எனத் தெரிவிக்கின்றது. இது காசாவில் உள்ள கட்டிடங்களின் 9.2 வீதமாகும். இந்த கட்டிடங்களில் 225,270 காசா பிரசைகள் வசித்து வந்தனர்.

2004இல் இஸ்ரேலிய இராணுவ அதிகாரி Giora Eilan பீகாசாவை huge concentration camp (பெரிய வதை முகாம்) எனக் குறிப்பிட்டுள்ளார். 2014இல் ஐ.நா. காசாவில் வாழும் மக்களைப் பற்றி, 'people are literally sleeping amongst the rubble; children have died of hypothermia" (மக்கள் உண்மையில் இடிபாடுகளுக்கு மத்தியில் தூங்குகிறார்கள்; குழந்தைகள் தாழ்வெப்பநிலையால் இறந்துவிட்டனர்) என்று குறிப்பிட்டது

உலகில் நடைபெறும் போராட்டங்கள் பாலஸ்தீனத்துக்கு நிரந்தர தீர்வை வழங்குமா என்பது கேள்விக்குறியே. ஏனெனில், அமெரிக்கா விரும்பும் தீர்மானமே இஸ்ரேல் - பாலஸ்தீனத்தில் நடைமுறைப்படுத்தப்படும். அது பாலஸ்தீன மக்களுக்கு ஒருபொழுதும் சார்பாக இருக்கமாட்டாது. அவர்கள் சமாதானமாகவும் அமைதியாகவும் வாழ முடியதவாறே இருக்கும்.

"ரதன்" <rathan100@gmail.com>

# டி. கண்ணன் கவிதைகள்



## 1.

அந்தநதியில் இளைப்பாறிவிட்டு
வேறோர் நதியில் நீரலைந்து
திரும்பும்போது
வீட்டில் அந்தி நுழைந்துவிட்டிருந்தது
உள்ளே இன்றும் இறந்து கிடக்கிறாள்
நினைவின் அம்மா

## 2. அன்றல்ல என்றும்

முதலில் என் முகச்சவரக்
குடுவையில்தான் உதித்தது நிலவு
பின்
அருகாமைக் குளத்தில்
பிறகு
அடர் மாம்பழத்தோப்பில் பதுங்கியது
மீன்நிறை ஏரியில் குதித்தது
பின் கடல் புகும்வேளை
சோர்வடைந்த என் கால்களால்
அதனை தொடர முடியவில்லை
வீடு திரும்பிவிட்டேன்
மொட்டைமாடி வானில்
பரிபூர்ணமாய் அரங்கேறிக் கொண்டிருந்தது
நிலவு

## 3.தொகுப்பு

கவியேறா
மனதொன்றின்
பகற் கனவில்
நான் தோன்றினேனாம்
பிறகு... என்றேன்
தோன்றிய வேகத்தில்
மறைந்தும் போனேனாம்

## 4.Plagiarism

வேறொருவரின் கனவொன்று
என்கனவில் முளைத்தது போலும்
நினைவுகளின் சாயைகளை
சுத்தமாய்க் காணோம்
நனவிலி இது
தன்னுடையது அல்ல என கதறியது
நீண்ட அந்தக் கனவு
ஒரு வழியாய் முடிந்தது
நனவிலி தன்னை புரட்டிப்போட
நான் அவனைத் தேடத் தொடங்கினேன்

## 5.கௌரவமானமனிதர்கள்

விருப்பமான மனிதர்களை
சந்திக்கும்போது
ஓர்வாடை எழுகிறது
அவர்களே விருப்பமில்லா
மனிதர்களை சந்திக்கும்போதும்
ஓர்வாடை எழுகிறது
கவிஞன் இரண்டிலும்
நுழைய முற்படுகிறான்
இருவராலும் விரட்டியடுக்கப்படுகிறான்

## 6.

கூடிக்கூடி பிரிந்த
இருவரின் நிழல்களும்
சகஜமாக பேசிக்கோண்டபடிக்கு
நடந்துவருகின்றன
அவர்களுக்குள்தான்
பேச்சுவார்த்தை
இல்லை

**"டி. கண்ணன்"**
<krishnaswamy164@gmail.com>

# ஆனந்தப்ரசாத்தின்
# சொல்லப்படாத கதைகள்

## பொ. கருணாகரமூர்த்தி

சொல்லப்படாத கதை - ஆனந்த்பிரசாத்; பக்கங்கள்: 296, விலை: 350₹;
காலச்சுவடு பதிப்பகம், 669 கே.பி.சாலை, நாகர்கோயில் 629001; தொலைபேசி:
+914652278525; மின்னஞ்சல்: kalachuvadu@sabcharnet.in

இந்நூல் ஆனந்தப்ரசாத்தின் பகுதியான சுயவரலாறாகவும் அவர் மாலுமியாகப் பரதேசங்கள் உழன்ற கடல் வாழ்வின் வரலாறாகவும் இளைஞனாக ஈழத்தில் வாழ்ந்த காலத்தின் ஈழஅரசியலாகவும் இருப்பதால், சமீபத்தில் தமிழில் வெளிவந்தநூல்களிலே பிரத்தியேககவனம்பெறுகிறது.

நானும் ஆனந்தப்ரசாத்தும் சமகாலத்தைய மாணவர்களாக இருந்ததோடு, சொற்ப புள்ளிகளால் பல்கலைக்கழகத்துள் நுழையும் வாய்ப்பை இழந்தவர்கள். அடுத்து என்ன செய்வதென்று அலமலங்கும் பொதுநியதியோடு திணறிக்கொண்டு, வாழ்வுதரும் பொருண்மிய அழுத்தத்தால், பொறுப்புக்களால், அடுத்து எதையாவது செய்யவேண்டி நாட்டைவிட்டு வெளியேறியவர்கள். ஆதலாலும்அவரதுஇந்தச் `சொல்லப்படாதகதைகள்' என்னை மேலும் ஆகர்ஷிக்கின்றது. நாட்டைவிட்டு வெளியேற முயன்றவர்கள் முன்னேயும் மூன்று தேர்வுகளே இருந்தன. முதலாவது ஐரோப்பிய நாடொன்றிலோ கனடாவிலோ அகதியாக குடியேறுவது; இரண்டாவது மத்திய கிழக்கு நாடுகள் எதிலாவது (unskilled) நிபுணத்துவமற்ற தொழிலாளர்களாகப் போய்விடுவது, அடுத்தது கிரேக்க அல்லது ஸ்பானியக் கப்பல்கள் எதிலாவது வைப்பர் / ஒயிலர் போன்ற சிற்றூழியர்களாகச் சேர்ந்துவிடுவது.

1980களின் ஆரம்பத்தில் கீழ்மத்தியதரக் குடும்பத்து இளைஞர்கள் குடும்பத்துக்குச் சொந்தமான நிலத்தை / மனையை விற்றோ, அம்மா / அக்காவின் மீதமிருக்கும் சீதன நகைகளை அடகுவைத்தோ / விற்றோ, வெறும் 500$ வரையில் புரட்ட முடிந்தவர்களில் நூற்றுக்கணக்கானவர்கள் தரைமார்க்கமாகவே இந்தியா - பாகிஸ்தான் - ஆப்கனிஸ்தான் - ஈரான் - ஈராக் - துருக்மினிஸ்த்தான் - செகோஸ்லேவாக்கியா - கிரேக்கம் என்று வேலை தேடிப் புறப்பட்டார்கள். இவர்களில் சிறுவீதமானவர்கள் நாடுகளைக் கடக்கும்போது பாலைவெளிகளிலும் ஆறுகளிலும் அடிபட்டும், பனிச்சேறுகளில் அகப்பட்டும் திரும்பியே வராமல் போனவர்களுமுண்டு.



திருமலையைச் சேர்ந்த ஆனந்தப்ரசாத்தும் அவரின் தோழர் அருள்ஜோதியும் ஏதாவதொரு கப்பலில் தொற்றிக்கொண்டு விடுவது என்றமுடிவு எடுத்த நிலையில், திருமலையில் ஜெகநாதன், பாலசிங்கம் என்று பிரபல கப்பல் ஏஜெண்டுகள் பலர் இயங்கிக் கொண்டிருக்க, யாழ்ப்பாணத்துக்கு வந்து ரொஹான் கந்தப்பாவிடமும் அந்த டைட்ஸ்கேர்ட் அக்காவிடமும் மாட்ட நேர்ந்ததை வாழ்க்கை கற்பித்த பாடமென்கிறார் ஆனந்தப்ரசாத்.

அக்காவோ இவர்களிடம் பணத்தைப் (30,000) பக்குவமாக வாங்கிக்கொண்டு விமானச் சீட்டை வாங்கிச் சென்னைவரை கூட்டி வந்தும் விடுகிறார். நீங்கள் மும்பாய் போனதும் அங்கே உங்களுக்காகக் காத்திருக்கும் ரொஹான் உடனேயே கப்பலில் ஏற்றிவிடுவார் என்பதுபோல்ச் சொல்லிவிட்டுச் சென்னையில் மாறிவிடுகிறார் அக்கா. இவர்கள் சென்னையில் ரொஹான் கந்தப்பா குழுமத்தால் கப்பல் ஆசைகாட்டி மூன்று மாதங்களின் முன்னதாகக் கூட்டிவரப்பட்ட விஜயனைச் சந்திக்கிறார்கள். இரண்டு நாட்கள் சென்னையில் ஒரு லொட்ஜில் தங்கிவிட்டு அங்கிருந்துதொடரியைப்பிடித்து விஜயனுடன் மும்பாய் வந்திறங்கினால்



அங்கேயும் விஜயனைப் போல் ஜெயக்குமார் என்றொரு அப்பாவிப் பையனையும் சந்திக்கிறார்கள். பிறநாட்டு வாழ்வின் `அந்தரிப்பும் அலைக்கழிப்பும்' அங்கேயே தொடங்கிவிடுகிறது.

கட்டைக்கவுண் அக்காவின் மூலம், பம்பாயில ரொஹான் உங்களை 1000, 1500$ சம்பளத்தில ஏற்றிவிடுறதுக்கு கிரேக்கக் கப்பலை இழுத்துப் பிடித்து வைத்துக்கொண்டு காத்திருக்கிறாரென்று சொல்ல வைத்து, காசைச் சுருட்டிக்கொண்ட ரொஹான் கந்தப்பா, இவர்களை கப்பல் ஏஜெண்டுகளிடம் அழைத்துப்போய் வேலை ஏதாவது இருக்காவென்று விசாரித்து தண்ணிகாட்டிக் கொண்டிருந்தான்.

கையில் செலவுக்குப் போதிய பணமில்லாது இவர்கள் நால்வரினதும் நாட்கள், மும்பாயின் லொட்ஜ்களிலும் வீதிகளிலும் 'ப்ரின்ஸ் ஒஃப் வேல்ஸ் சீமென்ஸ்' கிளப்பிலும் 'புனித ஃப்ரான்சிஸ்' தேவாலயத்திலும் 'கேட் ஒஃப் இன்டியா'விலும் விக்டோரியா டேர்மினலுக்கு எதிராக இருந்த ஹொட்டலிலுமாக இரண்டு மாதங்களைக் கழித்ததே பிரசாத்தின் கஷ்டஜீவிதத்தின் முதல் அவத்தை.

பின்னர் விஜயனும் இவரும், சீமென்ஸ் கிளப்பில் கரம்போர்ட் விளையாடிக் கொண்டிருந்த சிங்கள நபரொருவரின் உதவியுடன், இவர்கள் முன்னரும் பல கப்பல்களில் (இல்லாத பெயர்களில்) வேலைசெய்த அனுபவஸ்தர்கள் என்பதுபோன்ற போலியான சிடிஎஸ் சேர்டிபிகேட் (Certificate of discharge Seaman) ஒன்றைத் தயாரித்துக்கொண்டு ஏதென்ஸுக்கு வந்து,

ஒருவாறு எம்.வி. ஔரோரா எனும் கிழட்டுக் கப்பலில் Able Seaman ஆகச் சேர்ந்துவிடுகிறார்கள்.

ஆங்கில பாடத்தில் டியூட்டரி நடத்திக் கொண்டிருந்த அருள்ஜோதிக்கு இவரளவுக்குக்கூட நல்லூழ் வேலை செய்யவில்லை. அவர் இலங்கைக்கே திரும்பிப் போய் புளொட் இயக்கத்தில் சேர்ந்துவிடுகிறார். மும்பாயில் பிரியாவிடை கொடுத்த பிறகு அவரைப் பிரசாத் காணவே இல்லையாம்.

கப்பலுக்குள் முன்னர் எப்போதும் காலே பதித்திராத பிரசாத்துக்கும் விஜேயுக்கும் அக்கப்பலில் ஏலவே பணிபுரிந்து கொண்டிருந்த சிங்களத் தோழர்கள் கீர்த்தியும் ரஞ்ஜித்தும் உதவுகிறார்கள். தளத்தில் அவர்கள் பார்க்கவேண்டிய வேலைகளான கயிறுகளில் முடிச்சுக்கள் போடுவதிலிருந்து, அவதானிப்பு அறையிலிருந்து வரும் ஆணைகளுக்கிணங்கச் சுக்கான் பிடித்துக் கப்பலைச் செலுத்துவது, நங்கூரமிறக்கி நிலைகொள்வது, துறையை அடைந்ததும் கப்பல் பக்கவாட்டில் இறங்குதுறையோடு உராயாமல் பக்குவமாகக் கட்டுவது, வரையிலுமான அனைத்து வேலைகளையும் துவேஷங்கள் எதுவுமின்றிக் கற்றுக்கொடுக்கிறார்கள். இவர்கள் மெல்ல மெல்லக் கிரேக்க மொழியில் தேறுவதும் கப்பலின் பணிகளை இலகுவாக்குகின்றது.

கிரேக்கத்தின் துறைமுகமொன்றிலிருந்து வியட்நாமுக்கு கோதுமை மாவு மூட்டைகளை நிவாரணமாக எடுத்துச்சென்ற முதற் பயணத்திலேயே வங்காள விரிகுடாவில எம்.வி. ஔரோறா புயலில் அகப்பட்டுவிடுகிறது. கடல்நீர்ப் பரப்பில் கப்பல் காணாமற்போவதும் பின் மீண்டெழுவதுமாக இருந்ததாம். புயலில் எழுந்த பேரலைகள் கப்பலின் பாக்கவாட்டில் மோதிச் சிதறி `ஹாட்ஸஸ்' எனப்படும் சரக்குச் சேமிப்புக் கிடங்குக்குள் வழிந்ததால் மாவின் ஒரு பகுதி நனைந்து கெட்டுப்போய்விட, நிவாரணமாக அதைக் கொடுக்க முடியாதாகையால், அவற்றைக் கடலிலேயே கொட்டிவிடும்படி சரக்கை அனுப்பிய கொம்பனி `ஆக்ஞை' அனுப்புகிறதாம். கப்பல் ஓடிக் கொண்டிருக்கையிலேயே கப்பலின் சிப்பந்திகள் அனைவருமாகச் சேர்ந்து மாவு மூடைகளைக் கடலில் தூக்கிவீசவும், கடலில் கரைந்த மாவு நீண்ட மைல்கணக்கான தூரத்துக்குக் கப்பல் நகர்ந்த வழியெங்கும் வெள்ளை நிறப்பட்டிபோல தொடர்ந்து கொண்டிருந்ததாம். இதைப் பிற கப்பல்கள் எதுவாவது கண்டு, சர்வதேச கடல்மாசு படுத்துவதைக் கண்காணிக்கும் அதிகார நிறுவகத்துக்கு அறிவித்திற்றாயின், இக்கப்பலின் சேவை உரிமரத்தையே மீளெடுத்துவிடுவார்கள்.

பிரசாத், எம்.வி. ஔரோறாவில் பணியாரம்பித்து ஒரு வருஷம் பூரணமாகுமுன்பு, அக்கிழவியை `ஸ்கிறாப்' பண்ணிவிடுவார்கள் என்றொரு வதந்தி கப்பலில் கிளம்பவும், பயந்து போய்விடுகிறார். அதுவரை உழைத்ததும் சம்பாதித்ததும் அக்காவின் நகைகளை மீட்கவே போதாது. மீண்டும் மும்பாயைச் சென்றடைந்து காத்திருந்து இன்னொரு கப்பலில் ஏறுவதென்பது அவருக்கொரு கொடுங்கனவு.

ரஞ்ஜித்தோ, "அப்படி ஒன்றும் நடவாது மச்சான், பயப்படாத. புதிய பிஸ்டன்கள் மாற்றிய பிறவு கிழவி மணிக்கு 26 கடல்மைகள் ஓடுறாள். எப்படியும் இன்னும் கொஞ்சக் காலத்துக்கு வைத்து ஓட்டவே பார்ப்பார்கள்" என்று தென்பூட்டுகின்றான். அவனது வாய் மூர்த்தம் அப்படியே கிழவி மீண்டும் ஓட ஆரம்பிக்க அவர்களுக்குத் தொடர்ந்தும் அதில் வேலை செய்யமுடிகிறது.

இதுபோன்று பல சுவாரஸியமான சம்பவங்களாலும், கப்பலில் பணிசெய்ய நேர்ந்தபிறகு உடன் பணிபுரிய நேர்ந்த பன்னாட்டு மாலுமிகளின் நடத்தைகள் மற்றும் அவரவரது தனிக் கதைகளாலும், நனவிடை தோய்தல் பின் நிகழ்வு உத்தியில், பழைய நண்பர்கள், 70/80களின் அரசியல் நிகழ்வுகள் என பல்தளங்களில் விரிவுகொள்ளும் அத்தியாயங்கள் மாறிமாறி அடுக்கப்பட்டுள்ளமையால், வாசிப்பில் சோர்வைத் தராது நகர்கிறது புதினம்.

கப்பல் மத்தியதரைக் கடலூடாக நகர்ந்து சூயெஸ் கணவாயை நோக்கி போகையில் கடலின் இருமருங்கிலும் உள்ள நகரங்களிலிருந்து வரும் வெளிச்சங்களும், அலெக்ஷான்டிரியா போன்ற துறைமுகங்களின் வெளிச்ச வீடுகளிலிருந்து தெறிக்கும் வெளிச்சக்கதிர்களும், கடலின் மேற்பரப்பிலும் அதிலுள்ள கப்பல்களிலும் பட்டுத் தெறிப்பதும்; மேலும் செல்ல ஐக்கிய அமீரகத்தின் மீன்பிடிக் கப்பல்கள் செறிவாக மின்மினிகளைப் போல கடலில் மிதந்து கொண்டிருக்கும் அழகும் வார்த்தை வயப்படுகின்றன, அபூர்வமான கடற்பறவைகள் தலைகீழாகப் பறந்து வந்து கடலில் குத்தி மீன்களைப் பிடித்துக்கொண்டு பறப்பதையும், அங்குவீசும் சீதளம் நிறைந்த காற்றுத்தடவித் தரும் சுகத்தையும் தன் கவித்துவ மொழியில் எழுதுகின்றார்.

சோதி என்று இவரது நல்ல நண்பரொருவர், திருமலை நகரில் மிதியுந்துத் திருத்தகமொன்றை வைத்து நடத்தி, தன் ஜீவனத்தை நகர்த்திக் கொண்டிருந்தார். பிரசாத்தின் மிதியுந்துக்கு ஏதாவது திருத்தம் செய்வித்தால் அதற்குரிய கிரயமாக இசைக் கலைஞராகிய பிரசாத் ஒரு பாட்டுப்பாடினால் போதும். சற்றே பெரிய திருத்தமென்றால், `இன்றொருநாள் போதுமா' போன்றதொரு கர்நாடக இசையுடனான உருப்படியைப் பாடவேண்டும். அவரது திருத்தகம் இருந்த நிலம் நகர சபைக்குச் சொந்தமானதென்று அடிக்கடி நகரசபையால் பிடுங்கியெறியப்படுகிறது.

சோதியும் தளர்விலாது தன் திருத்தகத்தைப் புதுப்பித்துக் கொண்டேயிருக்கிறார். விளைவாக அவர் கைது செய்யப்பட்டு மிலேச்சத்தனமாக ஆண் குறியில் மிதியுந்தின் கம்பியைச் செலுத்தித் துன்புறுத்தப்படுகின்றார்.

சில ஆண்டுகளின் பின்பு, எம்.வி. ஔரோறா மத்திய தரைக் கடலை கடந்துபோய் ஐக்கிய அரபின் அமீரகத்தின் ஜெட்டா துறைமுகத்தில் எரிபொருள் நிரப்புவதற்காக கட்டப்பட்டிருக்கையில், அதற்கு எரிபொருள் நிரப்புவதற்காக மாலுமிச் சீருடையில் வந்த சோதிக்கு, துணைசெய்ய கொஞ்சம் நரையும் போட்டுத்தாடியும்வைத்துக்கொண்டுவந்தபிரசாத்தை யாரென்றே கண்டுபிடிக்க முடியவில்லையாம்.

எம்.வி. ஔரோறாவில் நீண்டகாலமாக Able Seaman ஆகப் பணிபுரியும் செல்வராஜா எனப்படும் கொழும்புத்தமிழ் பேசும் தமிழரொருவர் கொழும்பில் மோட்டார் வாகன உதிரிப் பாகங்கள் விற்பனை நிலையம் வைத்திருந்த ஒரு பணக்கார அப்பாவின் மகன். அப்பா தியாகராஜன் நம்பிக்கையின் நிமித்தம் அளவுக்கு விஞ்சிய உதிரிப் பாகங்களைக் கடனாக, ராகமவில் பல்வகை வாகனங்களையும் திருத்தும் திருத்தகம் வைத்திருந்த சவரிமுத்து எனும் ஒரு வாடிக்கையாளருக்குக் கொடுத்து, அவர் அவற்றுக்கான கிரயம் எதையும் திருப்பாமல் ஒரு மழை இரவில் காணாமல் போய்விடவும், அப்பாவின் வியாபாரம் முறிவடைந்து போகிறது. சவரிமுத்துவின் வீட்டையும் HNB வங்கி கையகப்படுத்தி விடுகிறது. தனித்துப்போய்விட்ட சவரிமுத்துவின் அழகிய மனைவி வாஸந்தியையும் அப்பா அழைத்துக்கொண்டு மருதானையில் ஒருசிறிய வீட்டில் குடியேறிவிடுகிறார். எதிர்பாரத வாழ்வியல் திருப்பங்களால் குடும்பமே நடுத்தெருவுக்கு வந்துவிட்ட நிலமையில் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக செல்வராஜா இக்கப்பலில் வந்து மாய்ந்து கொண்டிருக்கிறார்.

அதேபோல் விஷ்ணுபட்டேல் என்றொருவர் ஏறத்தாழப் பணி ஓய்வுபெறும் வயதையும் (65) கடந்து அக்கப்பலில் தேர்ட் ஒஃபிஸராகக் பணிசெய்து கொண்டிருந்தார். நல்ல மனிதரான அம்மனிதருடனான ஒரு சம்பாஷணையின்போது, பிரசாத், இந்தவயதில் அவர் இன்னும் கப்பலிலோடி உழைக்க வேண்டிய அவசியமென்னவெனக் கேட்டபோது, அவர் தன் வாழ்க்கையிலுள்ள சோகத்தை விவரிக்கின்றார். `என் மகன் விஜய் ஒரு கெமிக்கல் இஞ்ஜினியர், மகள் லக்ஷ்மி ஒரு பட்டயக் கணக்காளர். இருவரும் நல்ல சம்பளத்தில் போபால் இரசாயனக் கொம்பனியில் பணிபுரிந்தார்கள், மகனுக்கு இரண்டு குழந்தைகள், மகளுக்கும் இரண்டு குழந்தைகள். என் பிள்ளைகளுக்கு உத்தரவாதமான வருமானம், எனக்கு 4 பேரக்குழந்தைகளென மகிழ்ச்சியாக வாழ்ந்தவேளையில் 1984ஆம் ஆண்டு டிசெம்பர் 2ஆம்தேதி, இரசாயன நச்சுவாயுக் கசிவு விபத்து ஏற்பட்டு உடல்வெந்து இறந்தபோன இரண்டாயிரம்பேரில் என் பிள்ளைகளும் அடக்கமானார்கள். பிள்ளைகளின் இழப்பை எண்ணியெண்ணி என் மனைவியும் சித்தப்பிரமைக்காளாகிவிட்டாள். ஊருக்குத்திரும்பி எனக்கு யாரையும் எதிகொள்ளும் திராணியில்லை, கால்களை இழந்துவிட்ட பறவையொன்று பிரபஞ்ச வெளியில் காற்றில்தான் தூங்கமுடியும் என்றொரு கவிதை படித்திருக்கிறேன், அதைப்போல் நானும் தொடர்ந்து கடலோடிக் கொண்டிருக்கிறேன்' என்றாராம்.

மருதானை ரவியென்றொருவர், எம்.வி. ஔரோறா உட்பட வேறும் சில கப்பல்களுக்குச் சொந்தமான குழுமத்தின் பங்குதாரரான கப்டன் நிகோஸ் அர்க்கைஸ் என்றொருவர், இன்னொரு பங்குதாரரும் கண்டபடி மாலுமிகளை வாயில் வந்தபடி வைதுகொண்டிருப்பவருமான இஞ்ஜினியர் கொறிந்தஸ் பனயோதிஸ் என்றொருவர், இப்படி அக்கப்பலில் பணிபுரியும் ஒவ்வொருவரிடமும், நிவர்த்திக்கமுடியாத கோபம், துரோகம், துன்பியல் நிறைந்த கதைகள் பல உள்ளன. இப்புதினம் என்கிற மரத்திலுள்ள கிளைகளில் அக்கதைகளையும் முடிந்த அளவில் சேர்த்துக்கொண்டு முன் நகர்கின்றார் பிரசாத்.

16,17ஆம் நூற்றாண்டுகளில் இந்தியாவிலிருந்து உலகத்தின் கிழக்கு ஆபிரிக்கா, ஸ்வாஹில், சிஷேல்ஸ், மொறீஷியஸ், கினித்தீவுகள், மலேஷியா, ஃபுஜி, கயானாத்தீவு, ஜமேக்கா எனப் பல பாகங்களுக்கும், நாட்டின் பண்ணைகளை வளப்படுத்தவும் வீதிகளை நிர்மாணிக்கவும், கூலிகளாகவும் அடிமைகளாகவும் தென்னிந்திய மக்கள் கப்பல்களில் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறார்கள். அடிமை வர்த்தகம் ஸ்வாஹில் வியாபாரிகளால் பெருமளவில் மேற்கொள்ளப்பட்டது என்கின்றன சரித்திரக் குறிப்புகள். அடிமைகளாக ஏற்றிச்செல்லப்பட்ட பெண்களை இவ்வியாபாரிகளும் கப்பலின் சிப்பந்திகளும் தம்மிஷ்டத்துக்குப் பெண்டாண்டார்களாம். அவ்வாறு பெண்களைப் `பெண்டாண்டவர்கள்' அவ்அடிமைகளின் `கப்பல்க் கணவர்கள்' என அழைக்கப்பட்டார்கள். அதற்கொப்பான சம்பவமொன்று எம்.வி. ஔரோறாவின் பணிக்காலத்தில் பிரசாத்துக்கும் ஏற்படுகின்றது.

1969 - 1973களில் வியட்நாம் போர் முடிவுக்கு வந்ததும், நாட்டில் ஏற்பட்ட தாங்க முடியாத வறுமை பஞ்சம் காரணமாக வியட்நாமிய மக்கள் ஆண் பெண்ணென்ற பேதமின்றிப் பலநாடுகளுக்கும் வள்ளங்கள் மூலம் அபாயகரமான பயணங்களை மேற்கொண்டு, சிங்கப்பூர், மலேஷியா, தாய்லாந்து, யாவா, சுமாத்திரா, போர்ணியோ, அவுஸ்திரேயாவென்று தஞ்சமடைந்ததை நாம் அறிவோம். பிரசாத் வியட்நாம் போர் அந்நாட்டில் உண்டு பண்ணிவைத்த சீரழிவுகளையும் சற்றே நூலில்

விவரணஞ் செய்துள்ளார்.

வியட்நாமுக்குச் செல்லும் கப்பல்கள் அங்கிருந்து புறப்படுமுன் யாராவது அதன் ஹட்ஸுகளுக்குள்ளோ, இதர பதுங்கக்கூடிய இடங்களிலோ திருட்டுத்தனமாக ஏறி ஒளிந்திருக்கிறார்களாவென நுணுகிப் பார்ப்பார்கள். அவ்வாறே எம்.வி. ஔரோறாவும் வியட்நாமை விட்டுப் புறப்படுகையில் (துறைமுகத்தின் பெயர் சொல்லப்படவில்லை) இரண்டு விடலைப் பெண்கள் செல்வராஜா, ரவி, பிரசாத் ஆகியோரின் தயவால் கப்பலின் அடியில் வந்துநின்ற வள்ளத்திலிருந்து கயிற்றேணி மூலம் ஓசைப்படாது மேலேறி டெறிக்கோடு (கிறேன்) சேர்ந்தாற்போலிணைந்துள்ள பெட்டிபோன்றவொரு கட்டமைப்புக்குள் ஒளிந்துகொண்டு விடுவார்கள். கப்பல் துறையைவிட்டுப் புறப்பட்டுக் கணிசமான தூரம் சென்றபின் பசிமயக்கத்துடன் இருந்த அவ் யுவதிகளை செல்வராஜிண் கபினில் ஒருவரும் பிரசாத்தின் கபினில் ஒருவருமாக ஒளித்து வைத்திருக்கிறார்கள். இப்படி அகதிகளைத் தெரிந்தே ஒளித்து வைத்திருக்கிறார்கள் என்பது கப்பலின் நிர்வாகத்துக்குத் தெரியவந்தால் இவர்கள் வேலையிலிருந்து தூக்கப்படுவதுடன் கப்பல் அடுத்து அடையும் நாட்டின் அரசினால் தண்டனைக்குமாளாகலாம்.



இவ்வேளை கப்பல் மலாக்கா கணவாயினூடு கடந்துசெல்கின்றது. தொலைவில் இருமருங்கிலுமுள்ள நகரங்களிலிருந்து வரும் வெளிச்சங் ரம்மியமாக இருக்கின்றன. அமைதியான கடலின் அழகும் அருகில் மிதந்து கொண்டிருக்கும் இதர கப்பல்கள்களில் இருந்துவரும் வெளிச்சங்களின் அழகையும் கடலில் பறந்துசெல்லும் கடற்பறவைகளின் அழகையும் வர்ணிப்பதில் பிரசாத் தானொரு கவிஞனென்பதை இரண்டாவது முறையும் நிரூபித்துவிடுகின்றார்.

கப்பல் மலாக்கா கணவாயைக் கடந்து அடுத்த தரிப்பான பாங்கொக் நகரின் `பாக்னம்' அடைய 2 வாரங்களாகின்றன. அதுவரையில் அந்தப் பெண்கள் இருவரையும் தமது ஒருவருக்கான ஒடுங்கலான கட்டிலில் ஏனைய மாலுமிகள் கண்ணிற்படாத மறைத்துப் படுக்கவைத்து / சாப்பாடு வழங்கி / குளிக்க வைத்து அழைத்து வருகிறார்கள். தன் கட்டிலைப் பகிர்ந்து இரண்டு வாரங்கள் வந்தவளால் செல்வராஜாவின் கற்புக்கென்னாயிற்றோ தெரியாது, அது முற்றிலும் சஸ்பென்ஸ். ஆனால், பிரசாத்தின் கபினுக்குள் வந்தளது கூந்தலில் தென்சீனத்துக்கடலின் வாசனை வருகிறதாம். `பாக்னம்' துறையிலிருந்து எம்.வி. ஔரோறா சிங்கப்பூரையடைய மேலும் ஒருவாரமாகியிருக்கலாம். பிரசாத்தின் கடுமையாக வேலை செய்துசெய்து இறுகிப் போயிருந்த முதுகையும் தோட்பட்டைகளையும் அம்மங்கை இதமாக வருவருடிச் சுகம் கொடுக்கிறாள். பின் சுகங்களின் எல்லை விரிகிறது. அவளின் உளதோ இலதோவெனத் துணியமுடியாத மார்புகளை ஸ்பரிசித்தபடி இடைவெளியிலாது நெருக்கியபடி எம்.வி. ஔரோறாக் கிழவி வெகுமதியாகக் கொடுத்த தேன்நிலவைக் கழித்ததையும் அவளது கப்பல்க் கணவனாக வாழ்ந்ததையும் நேர்மையுடன் பதிவுசெய்கின்றார்.

நாவலின் இறுதி அத்தியாயத்தில் தனது முதல் நாலுவருட கடல் வாழ்வை முடித்துக்கொண்டு மீண்டும் மும்பாய்க்கு வந்துசேரும் பிரசாத், ஃப்றின்ஸ் ஒஃப் வேல்ஸ் சீமன்ஸ் கிளப்புக்கு அண்மையாக இவரிடம் *30,000* ரூபாய்கள் பணத்தை வாங்கிக்கொண்டு தண்ணிகாட்டிய ரொஹான் கந்தப்பாவைத் தற்செயலாகக் காணநேர்கிறது. `ஒரு கடலோடி தன்னுடன் எப்போதும் ஒரு கத்தியை வைத்துக்கொள்வது அவனது தற்பாதுகாப்புக்கு நல்லது' என்ற அறிவுரையுடன், கிரேக்கத்தின் `திஸ்ஸலோனிக்'கில் களூரஞ்ஜித் வாங்கிக்கொடுத்த கத்தியை எடுத்துகொண்டு, ரொஹான் கந்தப்பாவைச் சொருகப்போகவும் களூரஞ்ஜித்தே வந்து அவரைத் தடுத்தாட்கொண்டு விடுகிறார். சங்கீதத்தில் ஆற்றலும் + லயவாத்தியங்கள் வாசிப்பதில் தேர்ச்சியுமுடைய ஒரு கலைஞனால் ஒரு கொலையைப் பண்ணவே முடியாது. இறுதியான இக்கதை மட்டும் எனக்குக் கொஞ்சம் நாடகீயமாகப்படுகிறது. அச்சம்பவம் அன்றைக்கு அரங்கேறியிருந்தால் ஆனந்தப்ரசாத்தையும் கூடவே அவரது சொல்லப்படாத கதைகளையும் நாமும் இழந்துவிட்டிருப்போம்!

எம்.வி. ஔரோறாவை விடவும் பின்நாட்களில் பல கப்பல்களில் பணிசெய்த அனுபவங்களையும் சொல்லப்படாத கதைகளின் தொடர்ச்சியாக எழுத ஆரம்பித்துள்ளார் ஆனந்தப்ரசாத். இன்னும் பல சுவாரஸியமான சம்பவங்களை அவரது கவித்துவமொழியில் அதில் எதிர்பார்ப்பதோடு இரண்டாவது சுவைத்தலுக்கும் வாசிப்பு அனுபவத்துக்கும் இப்போதே என்னைத் தயார்ப்படுத்திக் கொண்டுள்ளேன். ஆனந்த் பிரசாத்துக்கு என் பாராட்டுக்களும் அமோக வாழ்த்துக்களும்!

பொ. கருணாகரமூர்த்தி <karunah08@yahoo.com>


SRI VEERA'S GROUP
SRI VEERA'S CREATIONS
ஸ்ரீ வீராஸ் கிரியேஷன்ஸ்
SRI VEERA'S CREATIONS
(Silks Textiles & Readymade Showroom)
மொத்த விலை ஷோரூம்
Wholesale showroom
www.sriveeras.com
www.facebook.com/sriveerascreations
2 Wheeler & Car Parking வசதியுடன்
எண். 51-52/1, M.C. ரோடு, சென்னை - 600 021.
போன் : 2590 1771, 2590 1772, 2590 1773, 2590 1774

# மொழி

## இந்திரா பார்த்தசாரதி

மொழி, ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் கலாசார வெளிப்பாடே யன்றிச் சாதி,மதம் ஆகியவற்றுக்கும் அதற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. அம்பேத்கர், ஒரு மிகச் சிறந்த சிந்தனையாளராக உருவாகி, ஹிந்து மதத்தின் ஆணி வேர்களை அசைத்துப் பார்க்க முடிந்ததென்றால், அவருடைய சம்ஸ்கிருத புலமையே இதற்குக் காரணம்.

சேக்கிழார் இயற்றிய, 'பெரிய புராணத்'துக்கு சம்ஸ்கிருத மொழியிலிருந்த 'உபமன்யு பக்த விலாஸமே' மூல நூல் என்று பலர் சொல்லி வந்திருக்கிறார்கள். காரணம், சமயம் சம்பந்தப்பட்ட எந்த நூலாக இருந்தாலும் அது வட மொழியில்தான் முதலில் தோன்றியிருக்க வேண்டும் என்ற நம்பிக்கை.

'உபமன்யு பக்த விலாஸம்' என்ற நூல், ஸ்ரீநிவாச கவி என்பவரால், விஜயநகர அரசர் அச்சுத ராயன் (கிருஷ்ணதேவராயர் மகன்) காலத்தில பதினாறாம் நூற்றாண்டில் சம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டது. அவர் அப்படியே சேக்கிழாரின் 'பெரிய புராணத்தை வடமொழியில் மொழியாக்கம் செய்திருக்கிறார், அவ்வளவுதான். காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோ யிலிலுள்ள அச்சுதராயன் காலத்திய சம்ஸ்கிருத கல்வெட்டு (பதினாறாம் நூற்றாண்டு) இதைக் குறிப்பிடுகின்றது, மேலும், சேக்கிழார், குலோத்துங்க சோழனை (பன்னிரெண்டாம் நூற்றாண்டு) குறிப்பிடும் செய்யுளும் ஸ்ரீநிவாச கவியின் நூலில் அப்படியே மொழியாக்கம் பெற்றிருக்கிறது.'உபமன்யு பக்த விலாஸம்' 'பெரிய புராணத்'துக்கு முந்தி என்றால் குலோத்துங்கனைப் பற்றிய குறிப்பு அதில் எப்படி இருந்திருக்க முடியும்? சம்ஸ்கிருத அறிவு மூலமாகத்தான் நம்மால் இதைத் தெளிவுபடுத்திக் கொள்ள முடிகின்றது.

அடுத்ததாகத் , தமிழில் உள்ள பெரும் பான்மையான செவ்வியல் இலக்கிய நூல்களுக்குசெம்பதிப்புஇல்லை.சான்றாகத், தொல்காப்பியப் 'பொருளதிகாரத்'திலும், பதிற்றுப்பத்திலும் பிற்சேர்க்கைகள் (பதிற்றுப்பத்துப் பதிகங்களில் பெரும்பகுதி, காலத்தால் பிந்தியவை) உள்ளன. 'பக்தி இலக்கியம்' என்றறியப்படும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் காணும் முத்திரைப் பாடல்கள் (Signature songs) அனைத்தும் பிறகு சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். 'நாலாயிரம்' என்ற கணக்கிற்காக அவையும் கவிஞர்களின் பாடல்களாக வைத்து எண்ணப்படுகின்றன. பக்தி இலக்கியங்கள், ஒவ்வொரு குறிப்பிட்ட சமயத்துக்குரிய வழிபாட்டு நூல்கள் என்று ஆகிவிட்ட படியால் ஆராய்ச்சி உலகம் செவ்வியல் வழியவையான இப் 'பக்தி நூல்களை' (பன்னிரு திருமுறைகளையும் சேர்த்தே சொல்லுகிறேன்) சமூகஇலக்கிய விமர்சனப் பார்வையோடு அணுகுவதில்லை. பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை பதிப்பித்த 'மர்ரே'பக்தி நூல் வெளியீடுகளிலும் குரு பரம்பரை பார்வையைத்தான் நம்மால் காண முடிகிறது.



சிலப்பதிகாரத்துக்கும் ஒரு செம்பதிப்புத் தேவை. அதில் காணும் பதிகமும் சமஸ்கிருதமயமாகி விட்ட, 'மதுரைக் காண்டத்தி'ன் 'பிற்பகுதியும் 'வஞ்சிக் காண்டமும்' பிற்சேர்க்கைகளாகவோ அல்லது கலாசார மாற்றங்களுக்கு உட்பட்டவைகளாகவோ தோன்றுகின்றன. இது குறித்து ஆழமான ஆய்வு தேவை. 'வஞ்சிக் காண்டத்தை' நிறுவதற்குத் தான், சிலப்பதிகாரப் பதிகத்தில்இக்காவியத்தின் செய்திகளாக மூன்று உண்மைகள் வற்புறுத்தப் படுகின்றன. சேரன் செங்குட்டுவன் பற்றி பரணர் பாடலாக அறியப்படும் பதிகத்தையும் இதன் பின்னணியில்தான் பார்க்க வேண்டும். சேரன் வடவர் மீது வெற்றி கொண்டான் என்ற அரசியல் செய்தியைக்காட்டிலும்சேர நாடு,கலாசார வழியாகப் பெரும் மாற்றத்துக்கு உள்ளானது என்பதுதான் முக்கியமான செய்தி.

எப்பாலும்கோடாமல் ஆய்வுக்கென்றே தம்மை அர்ப்பணித்துக் கொண்ட செவ்வியல் இலக்கியங்களில் தேர்ச்சி கொண்ட அறிஞர்கள் இப்பணிக்குத் தேவை.

இந்திரா பார்த்தசாரதி
<parthasarathyindira@gmail.com>

# ச.ஆனந்தகுமார் கவிதைகள்

ஓவியம்: **பால்க்ளீ**





## 1. தொலைத்தல்

தொலைந்து விட்டது

தொலைத்தலென்பது
அவ்வளவு இனிமையான
நினைத்து நினைத்து
மகிழ்கிறநினைவுகளுக்குள் ஒளித்து
தேவைப்படுகிற போது
திரும்ப புரட்டிப் பார்க்கிற
புத்தகத்தின் பக்கங்களை போல்
நெகிழ்வான அனுபவமல்ல

தேடுதலென்பது அதைவிடவும்
கடினம்
மனதின் ஞாபக அடுக்குகளை
எலியைப்போல ஒழுங்கற்று
விடாமல் கிளறி கொண்டேயிருக்க
வேண்டும்
தேவைப்படாத வன்ம குரோத
ஏமாற்ற கடந்தகாலம் தான்
முதலில் குதித்துக் கொண்டு
வரும்

மற்றவற்றை புறந்தள்ளி
திரும்ப திரும்ப தொலைந்ததை
சிந்திக்க வேண்டும்
சில நேரங்களில் தொலைந்தது
உடனே தெரியாமலும்
போகலாம் புரிந்துகொள்ள
சில காலம் தேவைப்படலாம்

இப்படித்தான் புரியாமலே
ஓடிக்கொண்டிருக்கிறோம்
நிலையற்றவைகளை நினைத்து
வாழ்க்கை தொலைந்தது
புரியாமல்

## 2. வெற்றி

எதிர் வாதத்துடன் துவங்கும் உரையாடல்கள்
பெரும்பாலும் வாத
ஒவ்வாமையோடுதான்
முடிவுக்கு வருகிறது

எது சரி என்கிற பகுப்பாய்தலை விட
தவறு யாரிடம் என்கிற
வலியுறுத்தலில் தான்
வன்மம் நிறைகிறது
வார்த்தைகளில்

மீண்டும் மற்றுமொரு உரையாடலின்
ஆரம்பபுள்ளியாகவும்
அது மாறக்கூடும்

சட்டென தொலைந்து போனது
தலைக்கேறிய வெற்றிகள் உன்
தற்காலிக மௌனத்தில்
வாதங்கள் அநாதையானதில்
வெற்றிகளென்கிற முகமூடி
கிழிந்து ஒளிந்து கொண்டிருக்கும்
தோல்வி மெதுவாய் வெளிவருகிறது

அப்போதுதான் புலப்படுகிறது
உன் தயவில்தான்
வென்றதாய் நான் நினைத்தேனென்று

## 3. கடல்

பல்லாயிரம் துமிகள் நெய்த
சமுத்திரகிலுக்கம்
குதித்தெழும்பும் அலைமனச்சிதறல்கள்
ஆழ்கடல் அமைதி அரவத்தில்
ஆட்கொண்டு பணிந்தேகிய சங்கமம்

விரிந்து பரந்திருக்கிற
ஆசைக்கடலுக்குள் ஆர்ப்பரிக்கிற
மிதவை

நங்கூர பார்வையில்
நடுக்கடலிலும் ஊசலாடுகின்றேன்

வெட்கச்சுழியில் ஆழிப்பேரலையாய்
அடித்து செல்லும் பாய்மரகலத்தின்
பகுதியாகின்றேன்

ஒற்றைப்புன்னகையில் கரைகடந்து
உடைத்துப்போட்ட கலத்திற்கு
உயிர்பிச்சை

கடலுடன் எனக்கு காந்தர்வம்
என் கடல் நீ

## 4. ஆக்கிரமிப்பு

பெரும் மழை வந்தவுடன்
உள்ளே முதலில் சாரல் வந்தது
பின்பு நடுங்கி கொண்டிருந்த
பூனையை உள்ளே விட்டேன்
வெளியே எங்கே பார்த்தாலும்
வாலாட்டும் டைகரை
அனுமதித்தேன்
கூடையை விட்டு கோழிகள்
வீட்டை முற்றுகையிட்டது
எனைக்கேட்காமலேயே சாளரத்தின்



வழியே எலி ஒன்று
உள்ளே புகுந்தது
இப்போது மழை நின்றுவிட்டது
வெளியே போக யாரும்
தயாரில்லை
அடுத்த முறை பொறாமை கோபம்
ஆத்திரம் காமம் எல்லாம்
மனதிற்குள் அனுமதிக்கையில்
கொஞ்சம் கவனமாக இருங்கள்

## 5. சுதந்திரம்

பட்டாம்பூச்சிகள்
வானைத்தொடுகிற
ஆசையுடன்தான்
பறக்க துவங்குகிறது

பறத்தலின் அனுபவத்திற்கென
சிறகுகள் வைத்து
அரங்கேறும் கொண்டாட்ட
பண்டிகை

காற்றில் மிதக்கிற
வித்தைகள் கைவந்ததில்
மகிழ்ச்சியில்
தேனெடுத்து கடக்கிறது
மகரந்த சேர்க்கை
அகப்படுவதும் அப்போதுதான்
கயிறு கட்டியவன்
கையில் சிக்கிக்கொள்கிறது பட்டாம்பூச்சி

இப்போது வான்தொடும்
ஆசையெல்லாம் மறந்து போனது
வெறுமனே கட்டியவன் விருப்பத்திற்கு
கயிறின் நீளத்திற்கு
பறக்க முயற்சிப்பதே
சாதனையாகிறது

## 6. ஏமாற்றம்

போனமுறை பழனிக்கு
மாலை போட்டதாக
காணிக்கை வாங்கியவர்கள்
இன்று கன்னி சாமியாக

ஏமாற வேண்டாம் என
கண்காட்டிய நண்பனை மீறி
உண்டியலுக்கு வைத்த
பணத்தை கொடுத்து நகர்ந்தேன்

ஒருவேளை உணவுக்கு உதவியதற்காய்
அநேகமாய் கடவுள் என்னைப்பார்த்து
புன்னகைத்திருக்கக்கூடும்

## 7. நடிப்பு

தெருக்கூத்தில் இரண்யன்
ஒவ்வொரு முறை வயிறு
கிழிபடும் நடிப்பில்
வீறிட்டு தேம்புவாள் மகள்

இப்போதெல்லாம்
வீட்டிற்குள்ளேயே நான்

பசியில்லையென சிரித்து
கடக்கிறாள்

வெறும் தண்ணீர் மட்டும் குடித்து விட்டு
அவளுக்கும் நடிப்பு தெரிந்திருக்கிறது
இந்த முறை எனக்கு பதில்
என் கலை அழுகிறது

“ச. ஆனந்தகுமார்” <vidaniru@gmail.com>

6

கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழ்க் கவிதையில் பெண் கவிஞர்களின் பாடுபொருளும் பங்களிப்பும் குறித்த ஓர் அலசல்..

# புதுக்கவிதை தளத்தில் பெண்கள்

**க்ருஷாங்கினி**

எதுகை, மோனை, திணை, தேமா, புளிமா என பலதும் கவிதைகளில் இட்டுக் கணக்கிட்டு கவிதை எழுதும் பொழுது சுதந்திரம் பறி போய்விடுகிறது. அப்படியான எண்ணத்தின் அடிப்படையில் தான் நவீன கவிதை வந்தது. புதுக் கவிதை பரவலாக வெளிவரும் காலம் வரை மரபுக் கவிதைகள் தான் தமிழில் வெளிவந்து கொண்டிருந்தன. அவற்றிலும் சில நல்ல கவிதைகளும் பல வெறும் பாட்டுக்களுமாக வந்து கொண்டிருந்தன. தற்காலத்தில் புதுக் கவிதையின் கட்டற்ற போக்கின் காரணமாக, மிக எளிதான வார்த்தைகளைக் கொண்டு மிக சுலபமான அர்த்தத்தைக் கூட தர முடியாத உரைநடை வந்து விட்டிருக்கின்றன. வெகுஜன இதழ்களில் வெளிவரும் பல கவிதைகள் இந்த வகையைச் சார்ந்ததுதான். இவ்வகைகளை கவிதைகள் என்பதை விடவும் கவிதைப் போலிகள் என்றழைக்காலாம்.

பக்தி காலத்திலும் பெண் கவிஞர் என்று அறியப்படுபவது ஆண்டாள் மட்டுமே. இந்நாளில், மரபுக் கவிதையில் சௌந்தரா கைலாசம் போன்ற சிலர் நினைவுக்கு வரக் கூடும். மரபு நம்மைக் கட்டுப்படுத்துகிறது என்ற ஆவேசத்தில் மரபிலிருந்து வெளிவந்து புதுக் கவிதைக்குள் நுழைந்த சில பெண்களும் உண்டு. ஆனால், அவர்கள் பரவலாகக் கிடைப்பதில்லை. கொஞ்சம் வளைந்து விட்டுப் பின் திரும்ப தன் பழைய பாதையைத் தேர்ந்தெடுத்து சொந்த வீடு வந்தடைந்த பத்திர உணர்வோடு இருப்பவர் சிலர்.

இது எந்தக் கலைக்கும் பொருந்தும். ஓவியத்திற்கும் பொருத்தமானதுதான். தத்ரூப ஓவியங்கள் வரைந்து, அதைப் பார்த்து சலிப்புற்று அதன் மாற்றாக வந்ததுதான் நவீன ஓவியம். தற்போது அரூப அடிப்படையில் நவீன ஓவியம் இயங்கி வந்தாலும் அவை ரூபத்தைத்தான் அரூபத்தில் காண்கின்றன. உருவத்தை ஒதுக்கி அதிலிருக்கும் உணர்வுகளையும் பதிவுகளையும் ஓவியமாக்கி தம் எண்ணத்தைப் பிரதிபலிக்கிறார்கள் ஓவியர்கள். கோடுகளற்றதை அடையும்



முன் கோடுகள் பற்றி நன்கு அறிந்து அதைக் கடந்து செல்லுதல் என்பது தான் அதன் பொருள். ஆனால், அதிலும் இதே போன்ற சங்கடங்கள் ஏற்படுகின்றன. அடிப்படைக் கோடுகள் கைவராத ஓவியனும், தான் அரூப ஓவியங்கள் அமைப்பதாய் கட்டற்ற, ஒழுங்கற்ற தன்மையில் தன் படைப்புக்களைக் குழப்பமாக உண்டாக்குகிறான்.

சூன்யம் என்பது எல்லாவற்றையும் இழத்தல் அல்லது விட்டொழித்தல் என்ற நிலைதானே தவிர எதையுமே அடையாமல் காற்றில் முழம் போடும் கலையாக, இல்லாததை அழித்தலாகாது. இது கவிதைக்கும் பொருந்தும். கவிதையைச் சொல்ல தனக்கான இடம் பற்றாமல் திணறும் பொழுது, இடப்பற்றாக்குறையால் மூச்சு முட்ட ஆரம்பிக்கும் பொழுது, அறையை விட்டு வெளியேறிப் புது காற்றை சுவாசிக்கும் நிலைதான் நவீனம் என்பது.

நவீனப் படைப்புக்களைப் படைப்பவனுக்குள் மிகத்தெளிவுவேண்டும். சொல்வதைவிட சொல்லாமல் இருப்பது எளிதல்ல. எனவே, படைப்பாளிக்குத் தெளிவும் செறிவும் இருந்தாலேவொழிய நவீனம் சாத்தியமல்ல. Illustratorsஎன்று அறியப்படும் பத்திரிகை ஓவியர்களும் தங்களைப் படைப்பாளிகளாக எண்ணி, ஒரு சில நவீனப் படைப்புகளுக்குத் தெளிவற்ற குழப்பக் கோடுகளை உருவாக்கி, நவீன ஓவியம் படைத்ததாகக் கூறுவதுபோல, கவிஞர் என்று தம்மை காட்டிக்கொள்ள சிலர் நவீனக் கவிதை படைக்கிறார்கள்.

மரபு சார்ந்து எழுதிய கவிஞர்களுக்கு இடையிலும் பெண்கள் என்று பார்த்தோமானால், மிகக் குறைவானவர்களே தேறுகிறார்கள். புதுக்கவிதை என்றால், அதில் ‘மணிக்கொடி’ காலம் தொடங்கி இன்றுவரையிலும் பெண் படைப்பாளிகள் மிகக் குறைவாகவே அறியப்படுகின்றனர். 90களுக்குப் பிறகுதான் பெண் கவிஞர்கள் தொடர்ந்து செயல்பட்டு வருகிறார்கள்.

‘எழுத்து’ பத்திரிகையிலிருந்து சி.சு.

செல்லப்பாவால் உற்சாகம் ஊட்டப்பட்டு எழுதிய இரா. மீனாட்சி, 'நகுலனி'ன் சகோதரியான திரிசடை, பெண்ணியத்தை மிக வலுவாகக் கூறிய ரோஹிணி, மெல்லிய நகைச்சுவை உணர்வுடன் தன் கவிதைகளை எள்ளல் முறையில் வெளியிட்ட தேவமகள், இயற்கையை மிக அதிகம் நேசித்து கவிதையில் பிரதிபலித்த கி. விஜயலட்மி என்ற சிலரை அவர்களது தொகுப்பின் மூலம் நாம் அடையாளம் கண்டு இன்றைய கவிதை ஓட்டத்தில் இணைக்க முடிகிறது. மேலும் பெண்கள் படைப்பு உலகில் தொடர்ந்து இயங்காமல், ஆங்காங்கே இடைப்பட்ட நிலையிலேயே நின்று விடுகின்றனர். படைப்புக்குத் தடை என்று எதைக் கூறினாலும் தொடர்ந்து படைக்கவியலாமல் நடுவில் நின்றவர்கள் ஏராளம். நல்ல படைப்புக்களைத் தந்துகொண்டிருந்த சில பெண்களும் கூட திருமணம், குடும்பம், குழந்தை என்ற காரணங்களால் தேங்கிவிடுகின்றனர். இன்னும் சிலர், தங்கள் அனுபவம் தங்கள் வாசிப்பின் காரணமாக மேலோங்கும்போது சில நல்ல படைப்புக்களை அளித்துவிட்டுப் பின் சொந்த அனுபவம் காலியானதும் தன் வட்டம் தாண்டி அடுத்தவட்டத்தை உருவாக்க இயலாமல் தங்கிவிட நேர்வதும் நடக்கிறது. தொடர்ந்து வாசித்தல், தொடர்ந்து படைப்புலகுடன் தொடர்புகொள்ளல் என்று இன்றும் கூட இயங்கி வருபவர்கள் வெகு சிலரே. அதில் தற்சமயம் சென்னையில் வாழ்ந்த சம்பூரண அம்மாள் மிக முக்கியமானவர்.



இரா. மீனாட்சி

பூரணி என்ற பெயரில் எழுதிவந்த இவர் 98 வயதுவரை தொடர்ந்து வாசிப்பதையும் தமது எண்ணங்களைப் பதிவு செய்வதிலும் சளைக்காமல் செயல்பட்டபவர். பூரணியின் தந்தையார் ராமசாமி தேர்ந்த படைப்பாளி, மகளுக்கும் அது இயல்பாகவே வந்தது. ஆதலால், பூரணியின் எழுத்துக்கள் வாழ்க்கையைச் சார்ந்தும் மனிதம் சார்ந்தும் சமூக அவலத்தைச் சாடுபனவாகவும் அரசியல் புரட்டுகளை கேள்வி கேட்பதாயும் அமைந்துள்ளன. 1913இல் பிறந்த பூரணி தமது ஒன்பது வயது முதலே எழுதி வருகிறார். மனக் குமுறல்களை, குதூகலங்களை வெளியிடச் சிறந்த வழி படைப்பு என உணர்ந்த அவர் தமது பார்வையில் பட்ட, தம்மை பாதித்த அனைத்து விஷயங்களையும் தம் அனுபவம் பிறர் அனுபவம் என எல்லாவற்றையும் உள் வாங்கித் தமது படைப்புகளில் பிரதிபலித்திருக்கிறார்.

தன்னுடைய 17வது வயதில், அதாவது 1930 முதல், தனது கவிதைகள் மூலம் அறியப்பட்டு வந்தவர். தனது 13 வயதில் திருமணம் முடிந்த பூரணி பிறந்த வீட்டில் புத்தகங்களுடன் வாழ்ந்தவர். புகுந்த வீட்டில் புத்தக வாசனையே இல்லாதிருந்தது கண்டு, தன் கணவனிடம் மிகத் தயக்கத்துடன் தனது வாசிப்பு பழக்கத்தைக் கூற இவர் கணவர், வரும் அத்தனை சஞ்சிகைகளுக்கும் உடன் சந்தா கட்டி வீடு தேடி புத்தகங்களை வர வைத்துவிட்டார்.

குடும்பம், பிள்ளைகள் என இவர் வாழ்ந்து வந்தாலும் நாட்டுப் பற்றும் சுதந்திர தாகமும் நிறைந்தவராக இருந்தார். அரசியலில் அதிகம் ஈடுபாடு கொண்டவர். சத்யாகிரக போரட்டங்களில் கலந்துகொண்டு சிறைக்குச் செல்லும் அத்தனை மக்களும் புண்ணியம் செய்தவர்கள், தான் மட்டும் அதிலெல்லாம் பங்கு பெற இயலாமல் குடும்பத்தில் உழல்கிறோமே என்ற உணர்வு கொண்டதனால் பூரணி தனது சுதந்திர தாகத்தை தனது படைப்பு எல்லைக்குள் பரவ விட்டார்.

1930களில் திருமணங்களில் பாட சுதந்திரப் பாடல்களும் தேசியப் பாடல்களும் எழுதியவர். அக்கால கட்டத்தில் பிராமணர் சமூகத்தினர் திருமணங்களில் சம்பிரதாயமாகப் பாடும் பாடல்கள் மாப்பிள்ளையைப் பற்றியும் பெண் குடும்பத்தில் தரும் சீதனத்தைப் பற்றியதாகவும்தான் இருக்கும். அதற்கு மாற்றாக அவர் தேசியப் பாடல்களை இயற்றினார். அது சுதந்திர தாகம் மிக்கக் குடும்பப் பெண்களின் உணர்வைத் தூண்டும் பாடல்களாகி தமிழ் நாட்டில் பல இடங்களில் இயற்றியவர் பற்றி அறியாமல் பாடப்பட்டு வந்தது. இது ஒரு குறிப்பிடப்பட வேண்டிய விஷயம்.

தேசியப் பாடல்களைத் திருமணப் பாடல்களாக்கி நலங்கு, ஊஞ்சல் என எல்லா செயல்பாடுகளுக்கும் பாட வைத்தார் பூரணி. அவர் சுதந்திர தேசத்திற்காக பாடுபட்ட பெண்களை ஒருங்கிணைத்து, ஒரு கவிதை எழுதி உள்ளார். அது,

ஏலேலோ இயக்கமதனில் ஜனங்கள்
இஷ்டமுடன் சேர்ந்தனரே
எத்தனையோ பெண்மணிகள்
ஏற்றமுடன் உழைத்தனரே
முடுகு - இது சற்றே துரிதமாக பாடும் நிலை.

இன்னொருபாடலில்சுதந்திரத்தில்பங்குகொண்ட மகளிரின் பங்களிப்பை ஒரே பாட்டிலடக்கி அனைவரையும் ஒருங்கிணைத்துள்ளார் பூரணி. ஊஞ்சல் பாட்டு என்பது திருமணத்தில் முக்கியமான சடங்கு. மண மகனையும் மண மகளையும் ஊஞ்சலில் உட்கார்த்தி பாட 'தேசிய ஊஞ்சல்' என்னும் தலைப்பில் பூரணி எழுதிய தேசியப் பாடல் இது.

சாந்தமெனும் நவரத்னப்
பந்தல் தன்னில்
பாந்தமுடன் காந்தி செய்த
ஊஞ்சல் மீதில்
ஆனந்தமாய் இந்திய
சகோதரரே

மோனமுடனே இருந்து
ஆடீர் ஊஞ்சல்
மது ஒழித்தல் என்னும்
விட்டம் போட்டு
மறியல் என்னும் சங்கிலியை
மகிழ்ந்து மாட்டி
மன மகிழ்வாய் ஒற்றுமையாய்
பலகை மீது
மாட்சியாய் சுயாட்சி பெற்று
ஆடீர் ஊஞ்சல்
ஆங்கிலரின் அதிகாரம்
அழித்திடவே
வீம்பாக அன்னவரின்
ஆடை தன்னை
வாங்காமல் பகிஷ்கரித்து
மகிழ்ச்சியாக ஓங்கும் சுய
ஆட்சி பெற்று உயருவீரே.

என்று தேசியத்தையே ஊஞ்சலாக்கிக் கவிதை பாடி உள்ளார்.

பூரணி அவர்கள் தமது 15ஆவது வயதிலேயே தேசியம் பற்றிய கவிதைகள் எழுதும் முன்பாக, ‘தமயந்தி சுயம்வரக் கும்மி’ என்ற நொண்டிச் சிந்து இயற்றியுள்ளார். நள தமயந்தியின் வாழ்க்கை வரலாற்றை முன்னமேயே நடைமுறையில் புழங்கி வந்த கும்மி மெட்டுக்களில் தம் சொந்தக் கவிதைகளில் இயற்றி, பாடி, கும்மி அடித்துள்ளார். இது போன்று,நூற்றுக் கணக்கான பாடல்களை 1929 முதல் 1945 வரை இயற்றியுள்ளார் பூரணி.


பூரணி

17-10-1913இல் பிறந்த பூரணி 17-11-2013ஆம் வருடம் நூறு வயதைக் கடந்து ஒரு மாதம் கழித்து முதுமையினால் மறைந்தார்.

இரா. மீனாட்சி, சி.சு. செல்லப்பாவின் ‘எழுத்து’வில் எழுத ஆரம்பித்து இன்றும் எழுதி வருபவர். புதுவையில் ‘ஆரோவில் செய்தி மடல்’ என்ற மாத இதழை கொண்டுவருவதில் முக்கியப் பங்காற்றுகிறார். ஆரோவில் கிராமத்தைச் சுற்றியுள்ள பிள்ளைகளுக்கான கல்வி,கிராம மக்களின் மேம்பாடு இவற்றுக்காக உழைத்து வருகிறார்.

மீனாட்சி தமது கல்லூரி நாட்களில் கவிஅரங்கம், பேச்சுப் போட்டி ஆகியவற்றில் கலந்துகொண்டுள்ளார். அப்போது, கல்லூரியின் மாணவத் தலைவராகவும் இருந்திருக்கிறார். ந. பிச்சமூர்த்தியும் சி.சு. செல்லப்பாவும் இவருள் ஒளிர்ந்த பொறியைக் கண்டுபிடித்து ‘எழுத்து’வில் இவரின் கவிதைகளை வெளியிட்டுள்ளார்கள். இவருடைய சிந்தனை காந்தீய சிந்தனைகளை ஒட்டியது.

நான்காயிரம் ஆண்டுகள் உலகக் கவிதை பாரம்பரியத்தைத் தொகுத்து அமெரிக்காவில் கொண்டு வரப்பட்ட உலகக் கவிஞர்கள் தொகுப்பில் இடம்பெற்றிருக்கும் ஒரே தமிழ் கவிஞர் இவர் மட்டுமே. இவர் தவிர இத் தொகுப்பில் இந்தியாவிலிருந்து வங்காளம்,ஹிந்தி ஆகிய இரண்டு மொழிக் கவிதைகள் மட்டுமே இணைக்கப்பட்டிருக்கின்றன என்பதும் குறிப்பிடத்தகுந்தது.

இவரின் கவிதைகளின் இயங்கு தளம் இயற்கை, அதன் அழகு, அது பற்றிய பிரமிப்பு என்பதாகவே அதிகம் இருக்கிறது. கடந்த பல ஆண்டுகளாக இவர் ஆரோவில் உலகக் கிராமத்தில் வசிப்பதும் ஒரு காரணமாக இருக்கலாம். இக்கிராமம் அரபிந்தரின் சீடர் அன்னையால் உருவாக்கப்பட்டது. இங்கு உள்ள தாவர வகைகள் உலகின் பல பகுதியிலிருந்தும் கொணர்ந்து வளர்க்கப்படுபவை. அதேபோல உலகின் பல நாடுகளைச் சேர்ந்த அன்னையின் சீடர்கள் இங்கு வந்து ஒரு குடும்பமாக எளிய வாழ்க்கை நடத்துகிறார்கள்.

இரா. மீனாட்சியின் முதல் கட்டக் கவிதைகள் நிறைய அழகும் இயற்கையும் சார்ந்ததாகவே இருக்கிறது. இயற்கை பற்றிய வரிகளில் கூட அதிகம் கேள்விகளும் முன்னிலை சார்ந்ததாகவும் கேட்கப்படும் விஷயங்களும் பதில்களாகவும் இருக்கின்றன எனலாம். அந்தக் காலகட்டத்தில் ‘கவிஅரங்களில்’ கூட்டத்தை நோக்கி விட்டெறியப்படும் கவிதை மரபு இவரிடமும் சற்று தூக்கலாக கவிதைகளில் வெளிப்படுகிறது.

‘பன்னீர்ப் பூ’ இவருடைய முதல் கவிதை. அது எழுதப்பட்ட காரணம் பற்றி சொல்கையில், அடுத்தவீட்டு மரம் வேலி தாண்டி தனது வீட்டில் பூக்களையெல்லாம் உதிர்த்து நிற்கும் காலைப்பொழுது. இத்தனை மணம் இருந்தும், இத்தனை அழகிருந்தும் ஏனோ யாரும் இதனை தமது தலையில் சூடவோ கடவுளுக்குப் படைப்பதோ இல்லை. அது ஏன் என்ற கேள்வி எழுந்ததாம் இவர் மனதில். ஆனால், பழைய பூக்களும் புதிய பூக்களுமாக நிலம் நிறைந்து, காலடியில் மிதிபடும் பாதங்களை வழுக்கச்செய்யும். வால் நட்சத்திரம் போல வானில் மிதக்கவேண்டிய இப் பூக்கள் தம் காலடியில் வழுக்கும் பூக்களாய் ஆனது கண்டு வருந்திப்பாடுவதாய் குறிப்பிடுகிறார். ‘பன்னீர்ப் பூ’ என்ற தலைப்பிலான அந்தக் கவிதை...

மழைக் காலம்
உதிர்ந்தது பன்னீர்ப்பூ.
மண்ணுக்குத்தான்,
மேனியெல்லாம் நீர்க்கோவை,

வழுக்கியது பன்னீர்ப்பூ.
விண்ணுக்குப் பறந்திருந்தால்
மீனோடு சிரித்திருக்கும்
வால் முளைத்த விண்மீனாய்
தெரிந்திருக்கும்.
காலத்தின் கோளாறோ?
காற்றோடு கண்ணேறோ?
மண்ணுக்கு வந்ததாலே
வழுக்கியது பன்னீர்ப்பூ

இக்கவிதையில் 'காலத்தின் கோளாறோ? காற்றோடு கண்ணேறோ?' என்று தனது சந்தேகங்களை கவிதையாக்கியுள்ளார்.

இரா. மீனாட்சியின் 'ஆடிக்காற்றே வா வா' என்ற கவிதை மிகப் பிரபலம். அது சி.சு.செல்லப்பா தொகுத்த 'புதுக் குரல்கள்' என்ற புதுக் கவிதைத் தொகுதியில் இருக்கிறது. அத்தொகுதியில் இடம்பெறும் ஒரே பெண் கவிஞர் இவர் மட்டுமே. அந்தக் காலகட்டத்தில் பல பெண் கவிஞர்கள் இருந்தபோதும் பரவலாக அறியப்பட்டவராக இவர் இருந்தார். அதுபோலவே 'அணுகுண்டு' என்ற கவிதையும் பிரசித்தம். அணுகுண்டு கண்டுபிடிப்பின் முதல் பரிசோதனை அழிவுக்கு ஆரம்பமாகக் கூடாது என்ற பெருங் கவலை இவரைத் தொற்றிக்கொண்டது. 'அணுகுண்டும் நாய்க்குடையும்' கவிதையில் காளான் போல பெருங்குடை விரித்த அணுகுண்டு கிளப்பிய தூசுகள் காளான் உணவானால் பாதகமில்லை, நஞ்சாகாமல் என்று ஏங்குகிறார். 'அணுகுண்டும் நாய்க்குடையும்' என்ற தலைப்பிலான அந்தக் கவிதை...

பறக்கின்ற மணலலைகள்
சுவரெடுத்த
பாலைவன வெண்பரப்பின்
கன்னிமைக் கனவழித்து
குண்டு வெடிப்பு,
கண்டுபிடிப்போ-
புகை நாய்க் குடைகளும்
நச்சுப்படையொன்றும்.
மின்னல் மழைக்கால
ஈரநிலத்துக் காளான்
மெத்தெனும் அழகு,
பசிக்கும் உணவாகும்.
அணுஞானிகள்
இங்கே வந்தால் தேவலை,
அப்புறம்
இந்தியக் குடைக்குள்ளே
ஒழுகாது.

இரா. மீனாட்சி பெண்ணியம் சார்பானவர் என்பது அவரின் பல கவிதைகள் மூலம் நமக்கு நிரூபணம் ஆகியுள்ளன. முற்றிலுமாக கோபம் கொந்தளிக்கும் இவரது 'மதுரை நாயகியே' கவிதை இன்றளவிலும் பரவலாகப் பேசப்படும் ஒன்று.

இவருடைய கவிதைகள் பெரும்பாலும் எதிரே யாரையோ இருத்தி உரத்துச் சொல்லும் பாணியில் அமைந்துள்ளவை. இயற்கையாயினும் பெண்ணியமாயினும் எல்லாமே குதூகலம், கோபம், இன்பம், ஆன்மீகம் என்று பேசிச் செல்லும் கவிதைகள். உள்மன வாசிப்புக்கானவைகளோ படிமங்களோ குறியீடுகளோ அதிகம் கொண்டவை எனக் கூற இயலாது. ஆனால், சொற் சிக்கனம் அநேகக் கவிதைகளை ஆழமாக்குகிறது. நிறையக் கவிஞர்களுக்கு வார்த்தைப் பிரியம் உண்டு. இவரிடம் அது குறைவு. அதே சமயம், கவி அரங்கிற்காக எழுதிப் படிக்கப்பட்ட கவிதைகளில் இந்தச் சிக்கனம் காணக் கிடைக்காது.

'மறு பயணம்' தொகுப்பு இவருடைய இளமைக்கால பயணம்போல இயற்கையுடன் குதூகலிக்கும் குழந்தையாய், தன்னைச் சுற்றியுள்ள பூக்களையும் நிலாவையும் மாற்றத்தையும் சுமந்து வருகிறது. ஆனால், இத்தொகுதியில் பானை ஒரு குறியீடாக விரவிக் கிடக்கிறது. பானை வெறும் பானையாய், வம்சங்கள் கொண்டதாய், நந்தவனத்தில் போட்டுடைத்த ஆத்மீகப் பானையாய், தினம் மாறும் நிரந்தரமற்ற மாறு பொருளாய், முகம் மறைத்துக்கொள்ளும் முகமூடியாய் என, பலவழிகளில் எடுத்தாளப்படுகின்றன.

இப்போதும் கவிதை எழுதிக்கொண்டு உள்ளார் இரா. மீனாட்சி. இவரின் கவிதைகளில் தற்காலத்தில் ஆரோவில், அன்னை, அரவிந்தர் என ஆன்மீகம் பரவியுள்ளது. அன்பு எங்கும் எப்போதும் என்று தனது உள்ளத்தைப் பதப்படுத்தி வாழும் கவிஞர் தம்மைச் சுற்றி எப்போதும் மக்களும் இயற்கையுமாய் வாழ்கிறார். அவற்றை நேசிக்கிறார். கரையான் ஏறி மரங்கள் அழியாமல் இருக்க மழை வேண்டுகிறார். தான் வளர்க்கும், தானே வளரும் எனப் பலவிதமான மிருகங்களுடனும் பறவைகளின் ஒலி கொண்டு மாதங்கள் கணக்கிட்டும், மரங்கள் சூழ்ந்திருக்கும் ஆரோவில்லில் அமைதியாக தமிழ் பரப்பியும், தமிழ் காத்தும், அன்பும் உணர்வும் கொடுத்தும் வாழ்ந்து வருகிறார். ஆனந்தம் காண்கிறார்

அடுத்தது... திரிசடை

(தொடரும்)

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**

**Editor : PRABHU THILAAK**

Posted at patrika channel egmore (Posted between 28-30 December, 2023)
Date of Publications : 25th of every month Reg.No.TN/TBM/150/2021-2023. ISSN Number 2456-3447 Dated: 04/10/2016.
R.DisNo. 2010/2002 RNI. TNTAM/2006/17955 Licenced to Post without Prepayment No: TN/PMG(CCR)/WPP 722/2021-2023.